# கிறிஸ்தவம்

## ஆசிரியர் அறிவுரைப்பு வழிகாட்டி

## தரம் 8



சமயக்கல்வித்துறை

மொழிகள், மானுடவியல், சமூகவிஞ்ஞானபீடம்

தேசிய கல்வி நிறுவகம், மகரகம

அச்சிடலும் விநியோகமும் - கல்வி வெளியீட்டுத் திணைக்களம்

# கிறிஸ்தவம்

## தரம் - 08

## ஆசிரியர் அறிவுரைப்பு வழிகாட்டி

சமயக் கல்வித்துறை
தேசிய கல்வி நிறுவகம்
மகரகம

அச்சிடலும் விநியோகமும் - கல்வி வெளியீட்டுத் திணைக்களம்

கிறிஸ்தவம்
தரம் - 08
ஆசிரியர் அறிவுரைப்பு வழிகாட்டி

முதற் பதிப்பு - 2008
மீள்பதிப்பு - 2009



ISBN 978 - 955 - 654 - 229 - 5

**சமயக் கல்வித்துறை**
**மொழிகள், மானுடவியல், சமூகவிஞ்ஞானபீடம்**
**தேசிய கல்வி நிறுவகம்**

வெளியீடு
கல்வி வெளியீட்டுத் திணைக்களத்திற்காக
ப்ரின்ட்கெயார் பெகேஜிங் (பிரைவேட்) லிமிட்டடினால் அச்சிடப்பட்டது.

# பணிப்பாளர் நாயகத்தின் செய்தி

தற்போதைய ஆசிரியர் அறிவுரைப்பு வழிகாட்டியானது ஆசிரியர்கள் தமது பாடங்களைக் கற்பிப்பதற்குப் பின்பற்ற வேண்டிய அவசியமான கற்றல் - கற்பித்தல் அணுகுமுறைகளை மேற்கொள்வதற்கு சிறந்த ஒரு வழியாட்டியாகும்.

இவ் ஆசிரியர் அறிவுரைப்பு வழிகாட்டியானது நீங்கள், உங்கள் வகுப்பறைச் செயற்பாடுகளை மாணவர் - மையக் கற்றலுக்கு ஏற்ற வகையில் ஒழுங்கமைப்பதற்கான வழிகாட்டலை வழங்குகின்றது. இன்றைய வகுப்பறைக் கற்றல் - கற்பித்தல் செயற்பாட்டை மாணவர் மையமாக ஒழுங்கமைப்பதென்பது எமது இலங்கை ஆசிரியருக்கும் வகுப்பறைக்கும் ஒரு புதிய அனுபவமன்று. எவ்வாறாயினும் ஆசிரியர் அறிவுரைப்பு வழிகாட்டி மூலம் மாணவர் மையக் கற்றல் - கற்பித்தல் முறைமையியலுக்கு ஒரு புதிய பண்புக் கூறு கிடைக்கிறது.

இவ் ஆசிரியர் அறிவுரைப்பு வழிகாட்டியானது மாணவர்களின் பங்குபற்றுதலை உறுதிப்படுத்தும் வகையில் பாடத்தைத் திட்டமிடுவதற்கு அவசியமான பாதையை வழங்குவதோடு மட்டுமல்லாது அதற்கு அவசியமான சூழலை மதிநுட்பத்துடன் கட்டியெழுப்பவும் உதவுகிறது.

ஆசிரியர் அறிவுரைப்பு வழிகாட்டியின் உள்ளார்ந்த அடிப்படையானது ஆசிரியர் என்பவர் வெறுமனே அறிவை ஊடுகடத்துபவராக அல்லாது அறிவில் மாற்றத்தை ஏற்படுத்துபவராகவும் இருக்க வேண்டும் என்னும் தத்துவத்தைக் கொண்டுள்ளது. இச்செயற்பாடானது மாணவரை கற்பவர் என்னும் நிலையிலிருந்து அறிவைத் தேடுபவர் என்னும் நிலையை அடைவதற்கும், இதன் மூலம் புதிய அறிவை உருவாக்கவும் உதவுகின்றது. ஆகவே, ஆசிரியர் என்பவர் மாணவருக்கு புதிய அறிவை ஆய்ந்தறிந்து கண்டுபிடிப்பதற்கான வழிகாட்டியாகவும் தூண்டியாகவும் செயற்பட வேண்டும்.

ஆசிரியர் அறிவுரைப்பு வழிகாட்டியின் உள்ளார்ந்த தத்துவமும் செயற்பாட்டு வடிவமைப்பும் பழமையான கற்பித்தல் முறைமையியலையும் சிந்தனைகளால் உண்டாகும் தடைகளையும் தகர்த்தெறிய ஆசிரியர்களைத் தூண்டும் என நம்பப்படுகின்றது. எனவே, ஆசிரியர்கள் புதிய கற்பித்தல் அணுகுமுறைகளையும் கற்பித்தல் முறைகளையும் அவசியம் கவனத்தில் எடுத்துக்கொள்ள வேண்டும். புதிய ஆயிரமாம் ஆண்டானது மிகப் பரந்த எல்லையற்ற புதிய அறிவின் தோற்றத்தையும் உருவாக்கத்தையும் கண்டுள்ளது. ஆகவே, ஒவ்வொருவரும் தமது புதிய செயற்பாடுகளை ஒரு முகப்படுத்தித் திட்டமிடுவதற்குப் பழைய முறைகளை மாற்றியமைக்க வேண்டிய தேவையுள்ளது.

ஆசிரியர் தனது கற்பித்தல் பணியில் பயன்படுத்தக்கூடிய அடிப்படையான அறிவுறுத்தல்களை வழங்குவதுடன் உயர் அணுகுமுறைகளை நோக்கி அவரை வழிநடத்துவதும் இவ்வகையான ஆசிரியர் அறிவுரைப்பு வழிகாட்டிகளில் உள்ளடக்கப்பட்டுள்ள தகவல்களின் ஊடாக எதிர்பார்க்கப்படுகிறது. அத்துடன் ஆசிரியர், இவ் அறிவுரைப்பு வழிகாட்டியை உரிய முறையில் கற்று அதனுடைய நோக்கங்களைக் கொண்டு வகுப்பறையில் உச்ச பயனைப் பெற்றுக் கொள்ள வேண்டும் என எதிர்பார்க்கப்படுகின்றது. இதன் மூலம், வகுப்பறையை வினைத்திறன் மிக்கதும் தரமானதுமாக்குவதுடன் கற்றல் - கற்பித்தல் செயற்பாடுகளை உயர்வடையச் செய்வதற்கும் ஆசிரியர் பெரும் முயற்சி மேற்கொள்ளுவார் என்பது எனது நம்பிக்கையாகும்.

இவ் ஆசிரியர் அறிவுரைப்பு வழிகாட்டியைத் திறம்படத் தயாரித்து வெளியிடுவதற்கு தமது நேரத்தையும் சிறப்புத் திறமைகளையும் பங்களிப்பு செய்த தேசிய கல்வி நிறுவகத்தைச் சேர்ந்த பாட நிபுணத்துவர்களுக்கும் வெளி வளவாளர்களுக்கும் எனது நன்றியைத் தெரிவிக்கின்றேன்.

**பேராசிரியர் லால் பெரேரா**
பணிப்பாளர் நாயகம்
தேசிய கல்வி நிறுவகம்
மகரகம

# முன்னுரை

இலங்கையின் கலைத் திட்டத் கொள்கையில், பாடசாலைப் பாடத்திட்டமானது, எட்டு வருடங்களுக்கு ஒரு முறை காலத்திற்கு இயைந்ததாக மறுசீரமைக்கப்பட்டு வருகின்றது. இதற்கேற்ப, 2007 ஆம் ஆண்டிலிருந்து நடைமுறைக்கு வந்த கல்விச் சீர்திருத்தத்தின் கீழ் இப்பாடத்திட்டமும் ஆசிரியர் அறிவுரைப்படி வழிகாட்டியும் அறிமுகஞ் செய்யப்படுகின்றன.

இதுவரை நடைமுறையில் இருந்த பாடத்திட்டங்களில், குறித்த பாடத்துடன் தொடர்பான வியடத் தலைப்புகளும் அவற்றின் உள்ளடக்கமும் வழங்கப்பட்டு அவற்றைக் கற்பிக்கும் பணி ஆசிரியரின் மீது சுமத்தப்பட்டிருந்தது. இந்நடைமுறை காரணமாக ஏராளமான தகவல்களை மாத்திரம் அறிந்த மாணவர் பரம்பரை ஒன்று உருவானது.

புதிய கலைத்திட்டச் சீர்திருத்தத்தின் கீழ் அறிமுகஞ் செய்யப்படுகின்ற பாடத்திட்டங்களில் அவ்வப்பாடங்களில் மாணவர் அடைந்து கொள்ள வேண்டிய தேர்ச்சிகள் பல, இனங்காணப்பட்டு முன்வைக்கப்பட்டுள்ளன. இந்தப் புதிய அணுகுமுறை மூலம் அதிக விடயங்களைக் கற்ற அவற்றை நடைமுறையில் செயற்படுத்துகின்ற, தேர்ச்சி கொண்ட மாணவர் சந்ததி ஒன்றை உருவாக்குவது எதிர்பார்க்கப்படுகின்றது. இதனால் புதிய பாடத்திட்டத்தைக் கையாளுகின்ற ஆசிரியர்கள், இவ்வேறுபாட்டைச் சரியாகப் புரிந்து கொள்வதுடன் அதில் விசேட கவனமும் செலுத்த வேண்டும். இந்நூலில் புதியதொரு கற்றல் கற்பித்தல் செயலொழுங்கு பரிந்துரைக்கப்பட்டுள்ளது. இச்செயலொழுங்கின் கீழ் மாணவர் நூலகத்தைப் பயன்படுத்தல், புத்தகங்கள் வாசித்தல், சுற்றாடல் அவதானித்தல், தகவல் அறிந்தோரை சந்தித்து செய்தி சேகரித்தல், தமது உடன் மாணவரிமிருந்து பல்வேறு விடயங்களைக் கற்றல், தாம் அறிந்தவற்றை அவர்களுடன் பரிமாறிக் கொள்ளல், (இயலுமெனில்) இணையத்தளம் மூலம் தகவல் திரட்டல் போன்ற கண்டறிதல் மூலமான கற்றல் கலாச்சாரம் ஒன்றைக் காண முடிகின்றது.

இதற்கு கல்வி வெளியீட்டுத் திணைக்களத்தினால் வழங்கப்பட்டுள்ள பாடப் புத்தகத்தினை உசாத்துணை நூலாகக் கொள்ளலாம். இவ்வாறு கண்டறியப்படுகின்ற தகவல்கள் மிகச் சரியாகவும், ஒழுங்காகவும், முழுமையாகவும் மாணவர்களை அடையச் செய்வது ஆசிரியர்களின் பணியாகும், இந்த வகையில் ஆசிரியரின் வகிபாகம் பகுத்தறிவு மூலம் போசிக்கப்படுவது அவசியமாகும். இங்கு, மாணவர்கள் ஏராளமான விடயங்களைக் கண்டறிந்து, பல்வேறு அம்சம்பளையும் தெரிந்தவர்ளாக மாறுகின்றனர். இத்தகைய செயற்பாட்டுக் கற்றல் சூழலானது மாணவர்களைப் பெரிதும் கவர்வதாக அமையும்.

இதற்காக, இந்த ஆசிரியர் அறிவுரைப்பு வழிகாட்டி நூலில் பரிந்துரைக்கப்பட்ட மாதிரிச் செயற்பாடுகளைக் கையாள்வதற்கும், இன்னும் பல்வேறு செயற்பாடுகளை உருவாக்கிக் கொள்வதற்கும் இந்நூலை ஒரு வழிகாட்டியாகக் கொள்ளுங்கள். இதனூடாக, புத்தாக்கத் திறனுடைய ஓர் ஆசிரியராகச் செயற்பட்டு, பல்வேறு புதிய செயற்பாடுகளை உருவாக்கிக் கொள்வீர்களென எதிர்பார்க்கின்றோம்.

இந்த புதிய வகுப்பறைக் கற்றல் - கற்பித்தல் செயலொழுங்கின் போது, மாணவர் எப்பொழுதும் செயற்படுவர்களாகக் காணப்படுவர். இதனால் அவர்களது திறமைகள், ஆற்றல்கள் வெளிக்கொணரப்படும். அவற்றுக்கு நீங்கள் மதிப்பளியுங்கள். அவர்களை உற்சாகப்படுத்துங்கள். இன்னும் மாணவர் சில சந்தர்பங்களில் எதிர் கொள்ளுகின்ற கடினப்பாடு / இடர்பாடுகளை நீங்கள் அவதானிக்க முடியும். அவ்வாறான சந்தர்ப்பங்களில், நீங்கள் உதவி செய்யுங்கள். அயலில் உள்ள உடன் மாணவருக்கு உதவி செய்ய மாணவரை வழிப்படுத்துங்கள். இவ்வாறு செயற்படும்போது இடம்பெறுகின்ற கணிப்பீட்டுச் செயலொழுங்கானது, சிறந்த கற்றலுக்கு உதவியாக அமையும்.

இந்த ஆசிரியர் அறிவுரைப்பு வழிகாட்டி நூலில் குறிப்பிடப்பட்டுள்ள கற்றல் - கற்பித்தல் செயற்பாட்டினை விரிவுபடுத்துவதற்கான கருவியானது, ஒப்படையாக அல்லது பயிற்சியாக மாணவர் கற்றவற்றை மேலும் பலப்படுத்த கூடிய விதத்தில் ஒழுங்கமைக்கப்பட்டுள்ளது. இதனைச் செயற்படுத்துவதில் உங்களது அவதானத்தைச் செலுத்துங்கள். இதனை, மாணவர் மதிப்பீடு செய்வதற்கான சந்தர்ப்பமாகவும் ஆக்கிக் கொள்ளுங்கள். இவ்வாறான கற்றல் - கற்பித்தலை விரிவுபடுத்தம் கருவிகளைத் தயாரித்து, பல்வேறு பயிற்சிகளில் மாணவர்களை ஈடுபடுத்துவதில் உங்களது கவனத்தைச் செலுத்துங்கள்.

இதனூடாக புதிய உலகிற்குப் பொருத்தமான தேர்ச்சிகளுடன் கூடிய மாணவர் சந்ததி ஒன்றை உருவாக்கலாம். அதற்குப் பொருத்தமானவாறு ஆசிரியர் வகிபாகமும், வகுப்பறையும், புதிய கற்றல் கலாச்சாரத்திற்கு ஏற்ப உருவாக வேண்டும் என எதிர்பார்க்கின்றேன்.

**விமல் சியம்பலாகொட**
உதவிப் பணியாளர் நாயகம்
மொழிகள், மானுடவியல் சமூக விஞ்ஞானம் பீடம்
தேசிய கல்வி நிறுவகம்.

# கல்வி வெளியீட்டு ஆணையாளர் நாயகத்தின் செய்தி

யாவருக்கும் கல்வி என்னும் நோக்கத்தை மையமாகக் கொண்டு எமது அரசு நாட்டிலுள்ள சகல பாடசாலை மாணவர்களுக்கும் இலவசமாகப் பாடநூல்களை வழங்கி வருகின்றது. அத்துடன் ஆசிரியர்களுக்கு ஆசிரியர் அறிவுரைப்பு வழிகாட்டிகளை ஆக்கி வழங்குதானது கற்றல் - கற்பித்தல் செயன்முறையில் பண்புத்தர விருத்தியை ஏற்படுத்தும் என எதிர்பார்க்கப்படுகின்றது.

வகுப்பளைக்குள்ளும் அதற்கு வெளியேயும் மாணர்களின் அறிவுவிருத்திச் செயற்பாட்டுக்கு வழிகாட்டுவோர் ஆசிரியர்களே. மேலும், பாடத்திட்டத்தால் எதிர்பார்க்கப்டும் தேர்ச்சி மட்டங்களை நோக்கி மாணவர்களை வழிநடாத்தும் முக்கிய நபரும் வுசிரியரேயாவார். இந் நோக்கத்தை அடைவலற்கு இவ் ஆசிரியர் அறிவுரைப்பு வழிகாட்டி உங்களுக்குக் கைகொடுக்கும். இவ் ஆசிரியர் அறிவுரைப்பு வழிகாட்டியில் குறிப்பிடப்பட்டுள்ள வழிக்ட்டல்களைக் கற்றுப் பின்பற்றுவதன் மூலம் கற்றல் - கற்பித்தல் செயன்முறையை அதிக பயனுறுதியுடையதாக மாணவர்களுக்கு வழங்கும் பொறுப்பு ஆசிரியர்களாகிய உங்களைச் சார்ந்ததாகும். இப் பொறுப்பை உணர்ந்து செயற்படும் நீங்கள் பெறுமதிமிக்க ஒரு வளம் என்பதில் எவ்வித சந்தேகமுமில்லை.

அறிவு, திறன்கள், மனப்பாங்குகள், தேர்ச்சிகள் என்பவற்றையும் வலிமையான சமூக மற்றும் உள்ளார்ந்த திறன்களையும் கொண்ட முழுமையான பிரசைகளை சமூகத்திற்கு வழங்கும் பொறுப்பு உங்களுடையதே தற்கால உலகின் சவால்களுக்கு முகங்கொடுக்ககூடிய எதிர்கால சந்ததியை நீங்கள் உருவாக்குவீர்கள் என்பதே என் எதிர்பார்ப்பாகும். உங்கள் ஆற்றலை உறுதியாக்குவதன் மூலம் அவ் எதிர்பார்ப்பை வெற்றிகரமாக்குவதற்கு இவ் அறிவுரைப்பு வழிகாட்டி உங்களுக்கு உதம் என உறுதியாக நம்புகின்றேன்.

**டபிள்யு.எம்.என்.ஜே. புஸ்பகுமார**
கல்வி வெளியீட்டு ஆணையாளர் நாயகம்
இசுருபாய
பத்தரமுல்ல
12.11.2009

## ஆலோசனைக் குழுவும் ஆக்கியோர் குழுவும்

| | | |
|---|---|---|
| பணிப்பு | : | பேராசிரியர் லால் பெரேரா<br>பணிப்பாளர் நாயகம்<br>தேசிய கல்வி நிறுவகம்<br><br>திரு விமல் சியம்பலாகொட<br>உதவிப் பணிப்பாளர் நாயகம்<br>மொழிகள், மானிடவியல், சமூகவிஞ்ஞானப்பிரிவு<br>தேசிய கல்வி நிறுவகம் |
| மேற்பார்வை | : | கலாநிதி. மாபுல் கொட சுமணரத்தன தேரர்<br>பணிப்பாளர்,சமய கல்வித் துறை<br>தேசிய கல்வி நிறுவகம். |
| ஆலோசனை | : | கலாநிதி அருட்பணி. ஜயசிரி ரீ. பீரிஸ் |
| இணைப்பாளர் | : | முதுமாணி அருட்பணி. லொயிட் சாந்திகுமார்<br>கலைமாணி அருட்பணி. கமுனு டயஸ் ஜயவர்தன |
| ஆலோசனை குழு | : | அருட்கலாநிதி. ஜயசிரி ரீ. பீரிஸ்<br>(செயலாளர், இலங்கை தேசிய கிறிஸ்தவ மன்றம்)<br>அருட்பணி. எபநேசர் ஜோசப்<br>(தலைவர், இலங்கை மெதடிஸ்த திருச்சபை)<br>அருட்பணி கிங்ஸ்லி பெரேரா<br>(தலைவர், இலங்கை பப்டிஸ்ட் திருச்சபை)<br>அருட்பணி மு. பியதாச<br>(தலைவர், இலங்கை பிரஸ்பிட்டேரியன் திருச்சபை) |
| ஆக்கியோர் | : | அருட்பணி. செ.டே.ப. செல்வன் (BTH, BD, MA)<br>உயிர்த்த ஆண்டவர் கிறிஸ்து ஆலயம்<br>பேராதனைப் பல்கலைக்கழகம், பேராதனை<br><br>அருட்பணி. கிறிஸ்ரோபர் பால்ராஜ் (BTH, BD)<br>இலங்கை இறையியல் கல்லூரி, பிலிமத்தலாவ<br><br>திரு. ஆ. ஹேமச்சந்திர பெரேரா (BA, Dip. in Education, PGDEM)<br>கல்வித் திணைக்களம், பத்தரமுல்லை, இசுருபாய.<br><br>திருமதி. ரதீக்கா மெண்டிஸ் (MA, Dip. in Education, Dip. in Christianity)<br>புனித தோமா கல்லூரி, கல்கிசை.<br><br>திருமதி. ஆலீன் மக்ஷேன் (BTH)<br>கில்வூட் கல்லூரி, கண்டி. |
| அட்டைப்படம் | : | அருட்பணி. செ.டே.ப. செல்வன் |
| கணினி வடிவமைப்பு | : | செல்வி. கிறிஸ்டின் சிந்துஜா எட்மன்ட் |

# உள்ளடக்கம்

## பகுதி - 1

# பகுதி - I

## 8.1.0 : பாடத்திட்டம்

| | | |
|---|---|---|
| 8.1.1 | : | அறிமுகம் |
| 8.1.2 | : | பாடத்திட்டத்தின் நோக்கம் |
| 8.1.3 | : | வகுப்புக்குரிய தேர்ச்சி |
| 8.1.4 | : | பாடத்திட்டம் |
| 8.1.5 | : | பாடசாலைக் கொள்கையும் வேலைத்திட்டமும் |
| 8.1.6 | : | கணிப்பீடும் மதிப்பீடும் |

## 8.1.1. அறிமுகம்

ஒழுக்க விழுமியங்கள் நிறைந்த சமூகத்தைக் கட்டியெழுப்ப வேண்டுமெனில் சமயத்தின் மூலம் மட்டுமே அதனை நிறைவேற்ற முடியும். எனவே சிறு வயது முதல் பிள்ளைகளுக்கு சமயத்தைப் பற்றிய சரியான விளக்கத்தினைப் பெற்றுக் கொடுக்க வேண்டும். அது மட்டுமல்ல பிள்ளைகளின் அன்றாட வாழ்வில் சமய நெறிகளைக் கடைபிடித்து வாழச் செய்ய வேண்டும்.

தேர்ச்சியை அடிப்படையாகக் கொண்ட புதிய கலைத் திட்டத்தின் நோக்கமானது சமய பாடத்தை வாழத் தேவையான வழிகளை எடுத்துக் காட்டுவதாகும். அறிவு, திறன், மனப்பாங்கு, செயற்பாடு என்பனவற்றை ஒருவரோடொருவர் தொடர்புபடுத்துவதால் வாழ்வில் அதனை ஒரு பழக்கமாக்கிக் கொள்ளலாம். தரம் 6 தொடக்கம் தரம் 11 வரையில் ஒரே கருப் பொருள் அல்லது கருப் பொருள்கள் ஒரு தொடர்பான அடிப்படையில் எளிதான முறையில் வெளியிடப்பட்ட ஏதோவொரு முதிர்ச்சி நிலையை நோக்கிச் செல்லும் வகையில் தயாரிக்கப்பட்டுள்ள கலைத்திட்டத்தின் வழியாக இத்தேர்ச்சிகளை உருவாக்கிக் கொள்ளலாம்.

தரம் - 11 கல்வி கற்று முடிவடைவதோடு பெரும்பாலும் மாணவரது சமயக் கல்வியும் முடிவடைகின்றது. இதனால் சமூக ஆளுமையைக் கட்டியெழுப்புவதோடு தேவைப்படின் சமூகத்தையும் மாற்றமடையச் செய்யக்கூடியவராக இருக்க வேண்டும்.

வாழ்வின் ஒரு கட்டத்தை முடித்துக் கொண்டு இன்னுமொரு கட்டத்தை நோக்கிச் செல்லுகின்ற இவர்களிடம் விருப்பத்தை ஏற்படுத்துவதோடு, மாணவர்களது வாழ்க்கையிலே சமயத்தை வாழ்வளிப்பதற்கு இயலுமானவரை ஆசிரியராகிய உங்களது கற்பித்தல் செயற்பாட்டை முழுமையான அர்ப்பணிப்புடனும், பொறுப்புடனும் நிறைவேற்றி உங்களது முழுமையான ஒத்துழைப்பை வழங்க வேண்டும் என்பதே எமது ஒன்றிணைந்த எதிர்பார்ப்பாகும்.

## 8.1.2. பாடத்திட்டத்தின் நோக்கம்

- உயிர்த்தெழுந்த ஆண்டவர் கிறிஸ்துவின் அழைப்பை ஏற்று அவரது உயர்ந்த பண்புகளைப் பின்பற்றி வாழுதல்.

- இலங்கைக் குடிமக்களாகவும் ஆண்டவர் கிறிஸ்துவை பின்பற்றுபவராகவும் இருந்து தமது திறமைகளையும் ஆற்றல்களையும் தேசிய அபிவிருத்திக்குச் செலுத்துவதற்குத் தேவையான மேலதிகமான ஆற்றல்களை வளர்த்தல்.

- அன்பை அடிப்படையாகக் கொண்ட சேவை மனப்பான்மையுடன் சமூகத்தை உருவாக்குவதற்குத் தேவையான வழிவகைகளைச் செய்து கொடுத்தல்.

- இலங்கைக் கலாசாரத்தை மதித்து அக்கலாசாரத்தின் பெறுமானங்கள் மூலம் செபங்கள், தியானங்கள் என்பவற்றைச் சேர்த்துக் கொண்டு வழிபாடுகளை ஒழுங்குசெய்து அர்த்தமுள்ள வழிபாடாக நடத்துவதற்கு வழிவகுத்தல்.

- தேசிய ரீதியானதும் சமயங்களுக்கிடையிலானதுமான நட்புறவை வளர்ப்பதற்காக, நீடித்து நிலைக்கக்கூடிய மனித தொடர்புகளைக் கட்டியெழுப்புவதன் மூலம் இறை அருளைப் புவியில் விரிவாக்குவதற்கான பங்களிப்பிற்குத் தேவையான பின்னணியை உருவாக்குதல்.

- தன்னைச் சூழவுள்ள இயற்கைச் சூழலைக் கடவுளின் கொடை எனக் கருதி அதனைப் பாதுகாத்து விருத்தி செய்வதற்கான படிமுறைகளை மேற்கொள்வதற்குத் தூண்டுதல்.

- வாழ்க்கையும் மறைக்கல்வி கற்பதும், இரண்டும் ஒரே செயல் என்பதை ஏற்றுக் கொள்ளுதல்.



4. S.P.C. 080662

### 8.1.3 வகுப்புக்குரிய தேர்ச்சி

1. கடவுளில் விசுவாசம் கொண்டு ஒழுக்கமிகு வாழ்வு வாழ்வர்.
2. இயேசுவின் குணாதிசயங்களைத் தமதாக்கிக் கொள்வர்.
3. இறையரசின் போதனைகளைப் பின்பற்றி சமுதாயத்தில் நல்வாழ்வு வாழ்வர்.
4. திருவிவிலியத்தை நாளாந்த வாழ்க்கையின் வழிகாட்டியாகக் கொள்வர்.
5. இறைபடைப்புகளை பராமரிக்கும் செயற்பாடுகளில் பொறுப்புடன் ஈடுபடுவர்.
6. "இயேசு சமுக" வாழ்வை தமதாக்கி வாழ்வர்.
7. இறையாட்சிக்காக உழைத்து இன்றைய இறைவாக்கினர்களாக வாழ்வர்.
8. சமயங்களின் புனித நூல்களை மதித்து விடுதலைக்காக செயற்படுவர்.

## 8.1.4 பாடத்திட்டம்

| தேர்ச்சி | தேர்ச்சி மட்டம் | பாட உள்ளடக்கம் | பாட வேளை |
|---|---|---|---|
| 1.0 இறை பற்றுடன் நல்வாழ்வு வாழ்வர். | 1.1 பொறுப்புடன் படைப்புகளை பராமரிக்கும் செயற்பாடுகளில் ஈடுபடுவர். | பொறுப்பு 2<br>தொ.நூல் 1,<br>1கொலோ. 1:25-26<br>யோபு 38:4 | 02 |
| | 1.2 குடும்பங்களாக பொறுப்புடன் படைப்புகளை பராமரிப்பதற்கு முக்கியத்துவம் வழங்குவர். | படைப்புகளும் பொறுப்புள்ள குடும்பங்களும்<br>தொ.நூல் 2<br>யோபு 33: 6<br>எசா 66: 9 | 02 |
| | 1.3 சமுகங்களாக, பொறுப்புடன் படைப்புகளை பராமரித்து சவால்களை எதிர் கொள்வதற்கு நடவடிக்கை எடுப்பர். | படைப்புகளும் பொறுப்புள்ள சமுகங்களும்<br>திபா 65:104:<br>யோபு 31:38-40<br>இணைச்சட்டம் 32:13-14<br>மலர்க்கி 2:10 | 02 |
| | 1.4 பொறுப்புடன் சூழலை பராமரிப்பதில் ஈடுபடுவர். | சூழலும் பொறுப்புள்ள மனுக்குலமும்<br>தி.பா 104:24-26 | |
| | 1.5 பொறுப்புடன் வளங்களை பராமரித்து அழிவுகளை நிறுத்த செயற்படுவர். | வளங்களும் பொறுப்புள்ள மனுக்குலமும்<br>உரோமை 8:18-25<br>சபைஉரை 7:29<br>எசா 45:8-12<br>தொ.நூ 11:1-9 | 02 |
| 2.0 இயேசுவின் வாழ்வின்படி வாழ்வர். | 2.1 இயேசுவின் தொடக்ககால திருப்பலி மாதிரியை பொறுப்புடன் பின்பற்றுவர் | இயேசுவின் தொடக்ககால திருப்பணி | 02 |
| | 2.2 இயேசு சமுகத்தின் வாழ்க்கை முறையின்படி வாழ நடவடிக்கை எடுப்பர். | இயேசு சமுகம்<br>மத் 4:18-22<br>மா 3:13-19 | 02 |
| | 2.3 இயேசு சமுக வாழ்க்கை முறையை பொறுப்புடன் பின்பற்றி பெண்கள், வயோதிபர், மாற்று வலுவுள்ளோர்... போன்றோரின் வாழ்வில் நல்மாற்றத்தை ஏற்படுத்த வழிசமைப்பர். | இயேசு சமுகமும் பெண்கள், சிறுவர், வயோதிபர், மாற்று வலுவுள்ளோர்.<br>லூக் 8:1-5,23:26-31<br>யோ 8:1-11<br>லூக் 2:52, மத்18: 1-5, 19:13-15,<br>நீதி 20:7, எபேசியர் 63 6 : 1-4,<br>திபா 71, இணை 5-16<br>யோ 5:1-9 மத் 8:1-4 | 04 |

| தேர்ச்சி | தேர்ச்சி மட்டம் | பாட உள்ளடக்கம் | பாட வேளை |
|---|---|---|---|
| | 2.4 அழிவுக்குப் பலியானவர்களின் வாழ்வு சிறக்க இயேசு சமூக விழுமியங்களின்படி நடவடிக்கை எடுப்பர். | இயேசு சமூகமும் அழிவுகளுக்குப் பலியானவர்களும் லூக் 13:1-5 | 02 |
| 3.0 இறையாட்சியை பின்பற்றி நல் வாழ்வு வாழ்வர். | 3.1 பொறுப்புடன் இறையாட்சிக்காக உழைக்க முன்வருவர். | இறையாட்சிக்காக வாழ்வோர் பேறு பெற்றோர். மா 1:15 | 02 |
| | 3.2 பேதுரு பவுல் போன்றோரின் சீடத்துவத்தை பின்பற்றி இறையாட்சிக்காக செயற்படுவர். | இறையாட்சியும் பேதுரு பவுல் போன்றோரின் சீடத்துவமும் மா 1:16-20, 14:66-72 மத் 16 : 13-20 திப 8:14-25,10 கலா 1:11-24 3:13-19 திப 13- | 02 |
| | 3.3 விசுவாசப் புரட்சியாளர்கள் மரியா, மகதலாமரியா போல இறையாட்சிக்கு மாறுத்தரம் வழங்குவர். | இறையாட்சியும் விசுவாசப் புரட்சியாளரும் யோ 20:1-18 லூ 1:46-55 19:25-27 | 02 |
| | 3.4 பொறுப்புடன் இறையாட்சியை திருமுழுக்கு யோவான் போல பின்பற்றி வாழ்வர். | இறையாட்சியும் திருமுழுக்கு யோவானும் மத் 3:1-12, 14:1-12,11:2-19 மா 1:1-8 | 02 |
| | 3.5 இன்றைய இறைவாக்கினராக வாழ்ந்து (பேரரசர் ஒஸ்கார் ரொமேரோ, பேராயர் ஹெஸ்டர் கமரா, அருட்பணி மைக்கல் ரொட்ரிக்கோ. செல்வி மியூறியல் ஹரட்சின்ஸ் பேராயர் இலக்ஷ்மன் விக்கிரமசிங்க, இறையாட்ச்சிக்காக உழைப்பர். | இறையாட்சியும் நெருக்கடி நிலையில் இறைவாக்குப் பலியும் 1:3-10 | 04 |

| தேர்ச்சி | தேர்ச்சி மட்டம் | பாட உள்ளடக்கம் | பாட வேளை |
|---|---|---|---|
| | 3.6 உண்மை - அமைதி ஏற்படுத்தி (அசிசியூர் பிரான்சிங், பேராயர் டெஸ்மன் ருட்ரு ...) இறையாட்சியின் அடிப்படையில் குரலெழுப்புவர். | இறையாட்சியும் உண்மை அமைதிக்கான குரல்களும்<br>யோ 16:13<br>மீக்கா 4:13 | 03 |
| 4.0 திருவிவிலியத்தின் படி வாழ்வர். | 4.1 இறைமக்களின் விசுவாச வரலாற்றை புரிந்து கொண்டு பொறுப்புடன் வாழ்வர். | இறைமக்களின் விசுவாச வரலாறு<br>வி.ப 4:15 | 02 |
| | 4.2 திருவிவிலியத்தை புரிந்து கொண்டு பொறுப்புடன் வாழ நடவடிக்கை எடுப்பர். | திருவிவிலியம்<br>11திமோ 3:16<br>பேது 2:1-5<br>11பேதுரு 1:19-24, 3:15-16<br>யோ 20:31<br>எபி 1:1-3 | 02 |
| | 4.3 இந்து, இஸ்லாம், பௌத்த சமய புனித நூல்களை புரிந்து கொண்டு மனித மாண்புக்காக உழைப்பர். | இந்து, இஸ்லாம், பௌத்த சமய புனித நூல்கள் | 03 |
| | 4.4 திருவிவிலியத்தின் அடிப்படையில் விடுதலைக்காக உழையுங்கள். | திருவிவிலியம் - விடுதலை<br>விப 3:7-23<br>கொ 61:1லூ, 4:10-19<br>யோ 8:32 | 02 |
| | 4.5 திருவிவிலிய அடிப்படையில் ஒருமைப்பாட்டு வாழ்வை அனைவருடனும் வாழ்வர். | திருவிவிலியம் - ஒருமைப்பாடு<br>யோ 15:12,17, 17:<br>எசே 2:14-16,<br>கலா 6:15<br>1கொ 1:10-12 | 02 |



5. S.P.C. 080662

## 8.1.5 பாடசாலைக் கொள்கையும் வேலைத்திட்டமும்

1. பாடசாலையில் தவணை ஒவ்வொன்றிலும் குறைந்தது ஒரு முறையேனும் திருவிவிலிய வாசிப்பில் அல்லது திரு வழிபாட்டில் ஈடுபடச் செய்தல்.
2. மாணவர்களது ஆன்மீக வளர்ச்சிக்கு திருச்சபையின் வழிகாட்டல்களைப் பெற்றுக் கொள்ள உற்சாகப்படுத்துங்கள்.
3. சமய, கலாசார சங்கங்களை வகுப்பு மட்டத்தில் ஒழுங்கு செய்தல்
4. சமய கருத்துக்களை நடைமுறைப்படுத்தும் விதமாக சிரமதானம் போன்ற செயற்திட்டங்களை நடைமுறைப்படுத்தல்
5. திருச்சபையின் செயற்பாடுகளில் பிள்ளைகளைப் பங்கேற்கச் செய்தல்
6. பல்வேறு சமயங்களுக்குரிய புனித தலங்களைத் தரிசிப்பதனூடாகவும் அச்சமயங்களின் பெரியார்களைச் சந்திப்பதனூடாகவும் குறித்த அச்சமயங்களுக்கு மதிப்பளிக்க வகை செய்தல்.

## 8.1.6 கணிப்பீடும் மதிப்பீடும்

கணிப்பீட்டு மதிப்பீட்டை பின்வரும் முறைகளினூடாக மேற்கொள்ளலாம்.

- எழுத்துப் பரீட்சை
- குறிப்புப் பதிவேட்டின் வாயிலாக
- ஆக்கங்கள்
- வரைபடங்கள்
- ஒப்படை
- செயற்றிட்டம்
- சுருக்கமான எழுத்துப் பரீட்சை
- அவதானித்தல்
- முறைசார்ந்த பரீட்சை
- முழுப் பரீட்சை

## பகுதி - II

### 8.2.0 பாடத்தின் தொடரகம்

8.2.1 கற்றல் கற்பித்தல் முறை விளக்கம்

8.2.2 தர விருத்தி உள்ளீடுகள்

8.2.3 செயற்பாட்டுத் தொடரகம்

## 8.2.1. கற்றல் கற்பித்தல் முறை விளக்கம்

இக்கற்கைநெறிக்குரிய கற்றல் - கற்பித்தல் முறையினைத் தீர்மானிக்கையில், தேடியாய்தலை அடிப்படையாகக்கொண்டு, மாணவரது தேர்ச்சிகளை உருவாக்கத்தக்க வகையில் கற்றல் கற்பித்தல் செயற்பாடுகளைத் திட்டமிடுவது குறித்துக் கவனம் செலுத்தப்பட்டுள்ளது. இவ்வாறாகத் தேர்ச்சிசார் கல்விக்காக ஆயத்தமாகும் போது, ஆசிரியரது வகிபாகத்திலும் தெளிவான மாற்றம் எதிர்பார்க்கப்படுகின்றது.

பண்டைக் காலந்தொட்டு பரவலாக நடைமுறையில் இருந்த மரபு ரீதியான கடத்தல் வகிபாகம் (Transmission Role) பிற்காலத்தில் அறிமுகம் செய்யப்பட்ட கொடுக்கல் வாங்கல் வகிபாகம் (Transaction Role) என்பன எமது வகுப்பறைகளில் தற்போதும் கூட அரசோச்சுவதைக் காண முடிகின்றது. இன்று பாடசாலையை விட்டுச் செல்லும் பிள்ளைகளின் கற்பனைத் திறன்கள், தனிப்பட்ட திறன்கள், சமூகத்திறன்கள் போன்றவையெல்லாம் சீர்குலைந்துள்ள நிலையில், கற்றல் - கற்பித்தல் முறையினை அபிவிருத்தி செய்ய வேண்டியதன் அவசியத்தையும் அதனை எவ்வாறு செய்வது என்பதையும் இனங்காணல் கடினமாகவுள்ளது.

கடத்தல் வகிபாகத்தில், தாம் கற்க வேண்டிய அனைத்தையும் அறிந்தவர் ஆசிரியரே என மாணவர் ஏற்றுக் கொள்வர். மாணவருக்கு எதுவுமே தெரியாது எனக் கருதும் ஆசிரியர் தமது அறிவை மாணவருக்கு கடத்துபவராகச் செயற்படுகின்றார். ஆசிரியரிடத்தே இருந்து மாணவருக்கு அறிவு கடத்தப்படுதல் மாத்திரம் இடம்பெறும். இவ்வகிபாகம் விரிவுரை போன்றதாகவே அமையும். இக்கற்றல் - கற்பித்தல் செயன்முறை மாணவரது சிந்தனையை - கற்பனையைத் தட்டியெழுப்புவதிலே அவர்களது ஆளிடை மற்றும் சமூகத்திறன்களை விருத்தி செய்வதிலே கணிசமான பங்களிப்பைச் செய்வதில்லை.

ஆசிரியர் வகுப்பறையில் நடத்தும் கலந்துரையாடல், கொடுக்கல் - வாங்கல் வகிபாகத்தின் தொடக்கமாகும். ஆசிரியருக்கும் மாணவருக்கும், பின் மாணவருக்கும் ஆசிரியருக்கும் இடையிலான கருத்துப் பரிமாற்றம், அதனைத் தொடர்ந்து உருவாகும் மாணவருக்கும் மாணவருக்கும் இடையிலான இடைத்தொடர்புகளும் படிப்படியாக ஓர் உரையாடலாக மாற்றம் பெறும். அறிந்தவற்றில் இருந்து அறியாதவற்றுக்கும், எளிமையானவற்றில் இருந்து சிக்கலானவற்றுக்கும் காட்சி (தூல) நிலையில் இருந்து கருத்து நிலைக்கும் மாணவரை இட்டுச் செல்வதற்காக ஆசிரியர் தொடர்ந்து வினாக்களை விடுப்பார்.

தேர்ச்சிசார் கல்வியில் மாணவரது பணிகள் முக்கிய இடத்தைப் பெறுகின்றன. வகுப்பில் ஒவ்வொரு மாணவனும் மாணவியும் அந்தந்தத் தேர்ச்சியில் குறைந்தபட்சம், அண்ணளவாகவும், பாண்டித்திய மட்டத்தையேனும் அடையத்தக்க வகையில் தலையிட்டு, வளவாளராக (Resource Person) ஆசிரியர் செயற்படுவார். கற்றலுக்குத் தேவையான உபகரணங்களையும் ஏனைய வசதிகளையும் மாணவரது இயலுமைகளையும் இயலாமைகளையும் இனங்காணல். தேவையான முன்னூட்டலும் பின்னூட்டலும் வழங்கி மாணவரது கற்றலை மேம்படுத்தல், வகுப்பறைக்கு அப்பாலும் கற்றல் - கற்பித்தலை இட்டுச் செல்வதற்காக, பொருத்தமான உபகரணங்களைத் தயார்ப்படுத்தல் போன்றவை எல்லாம் ஆசிரியரால் ஆற்றப்பட வேண்டிய அடிப்படைப் பணிகளாகும். மேற்போன்றவாறான பணிகளை உள்ளடக்கிய ஆசிரியர் வகிபாகமே நிலைமாற்ற வகிபாகம் (Transformation) எனப்படுகின்றது.

இதன் முதலாம் பகுதியில் பாடத்திட்டம் அறிமுகம் செய்யப்பட்டுள்ளது. இப்பாடத்திட்டத்தை நடைமுறைப்படுத்துவதற்காகப் பயன்படுத்தத்தக்க செயற்பாட்டுத் தொடர் இரண்டாம் பகுதியில் அடக்கப்பட்டுள்ளது. ஒவ்வொரு செயற்பாடும் குறைந்தபட்சம் மூன்று படிமுறைகள் அடங்கும் வண்ணம்

தயாரிக்கப்பட்டுள்ளது. மாணவரைக் கற்றலின்பால் ஈர்ப்பதே செயற்பாட்டின் முதலாவது படிமுறையினால் தொடர்புறுத்தும் படிமுறை (Engagement Step) எனப்படுகிறது. இதன் தொடக்கத்தில் ஆசிரியர் கொடுக்கல் வாங்கல் வகிபாகத்தின் பண்புகளை வெளிக்காட்டியவாறு மாணவருடன் உரையாடுவர். இது பின்னர் விருத்தி செய்து கொள்ள வேண்டிய அடிப்படைத் தேர்ச்சிகளுடன் தொடர்புடைய முன்னறிவு நினைவு கூரப்படும். மேலும், செயற்பாடுகள் குறித்த கோடிகாட்டல்களும்

வழங்கப்படும். இவ்வாறான கருத்துப் பரிமாற்றத்துக்காக ஆசிரியர் பல்வேறு உத்திகளைக் கையாளலாம். வினாக்கள் கேட்டல், படங்களைக் காட்சிப்படுத்தல், புதினத்தாள் நறுக்குகளை முன்வைத்தல், காட்டி மறைக்கும் அட்டைகளைக் (Flahs Cards) காட்டுதல் போன்ற தூண்டல் முறைகளைக் கையாளுதல், பிரச்சினைகள், புதிர்கள், விவகார ஆய்வு (Case Study) போன்றவற்றை முன்வைத்தல், உரையாடல் போலச் செய்தல், படம், செய்துகாட்டல் (Demonstration) போன்றவற்றை முன்வைத்தல், ஒலி நாடாக்கள், ஒலி ஒளி நாடாக்கள் போன்றவற்றைப் பயன்படுத்தல் போன்ற பல்வேறு உத்திகளை இதற்காக ஆசிரியர் பயன்படுத்தலாம். சுருக்கமாகக் கூறுவதாயின், பின்வரும் மூன்று நோக்கங்களையும் அடைவதைக் கருத்திற் கொண்டே செயற்பாட்டின் முதலாவது படிமுறை நடைமுறைப்படுத்தப்படுகின்றது.

வகுப்பின் கவனத்தைக் கவர்தல்

தேவையான முன்னறிவை நினைவு கூர்வதற்கு மாணவர்களுக்கு வாய்ப்பளித்தல்

செயற்பாட்டின் இரண்டாம் படிமுறையின்போது மாணவரை ஈடுபடுத்த எதிர்பார்க்கும் தேடியாய்வின் அடிப்படை அம்சங்களை அம் மாணவர்க்கு அறிமுகம் செய்தல்.

மாணவருக்கு கண்டறியும் வாய்ப்பை வழங்குவதற்காகவே செயற்பாட்டின் இரண்டாம் படிமுறை திட்டமிடப்பட்டுள்ளது. கண்டறிதலுக்கென விசேடமாகத் தயாரிக்கப்பட்ட அறிவுறுத்தற் படிவத்தை அடிப்படையாகக் கொண்டே மாணவர் கண்டறிகையில் ஈடுபடுவர். பிரச்சினையின் வெவ்வேறு அம்சங்களைக் குழுநிலையில் கண்டறிந்து ஒத்துழைத்துக் கற்கத்தக்க வகையில் இக்கண்டறிக்கையை ஆசிரியர் திட்டமிடல் வேண்டும். தரப்பட்டுள்ள மூல வளங்களைப் பயன்படுத்தி விழிப்புணர்வுடன் குழு கலந்துரையாடலை நடத்தியவாறு மாணவர்கள் கண்டறிகையில் ஈடுபடுதல் இப்படிமுறையின் சிறப்பியல்பாகும். தொடர்ந்தும் இவ்வாறான குழுச் செயற்பாடுகளில் ஈடுபடுவதனால் தன்னடக்கம், ஏனையோரின் கருத்துக்களுக்குச் செவிமடுத்தல், ஏனையோருடன் ஒற்றுமையாகச் செயற்படல், ஏனையோருக்கு உதவி புரிதல், நேர முகாமை, உயரிய தரமுடைய உற்பத்திகளைப் பெறல், நேர்மை போன்ற அன்றாட வாழ்க்கைக்குத் தேவையான முக்கியமான பல தேர்ச்சிகளை விருத்தி செய்து கொள்வதற்கு இப்படிமுறையூடாக மாணவர்க்கு வாய்ப்புக் கிடைக்கும்.

கண்டறிகைக்காக மாணவரை வழிப்படுத்துகையில் மாணவர் குழுக்களின் தலைமைத்துவம் குறித்து ஆசிரியர் முடிவெடுத்தலாகாது. மாறாக, மாணவர் குழுவில் ஒருவர் தலைவராக உருவெடுப்பதற்கான சூழ்நிலையை உருவாக்குதல் ஆசிரியரின் பொறுப்பாகும். இலை மறைகாயாகக் காணப்படும் ஆற்றல்கள் வெளிக்கொணரப்பட்டு, தருணத்திற்கு ஏற்ப தலைமைத்துவத்தை ஏற்கும் வாய்ப்பு மாணவருக்குக் கிடைக்க இது வழிகோலும்.

செயற்பாட்டின் மூன்றாம் படிமுறையின்போது, ஒவ்வொரு குழுவுக்கும் தாம் கண்டறிந்தவற்றை அதாவது தமது கண்டறிகையின் பெறுபேறுகளை ஏனையோரும் அறிந்துகொள்ளும் பொருட்டு, முன்வைப்புக்களை வைப்பதற்கு மாணவரைத் தூண்டுவதே இங்கு ஆசிரியரின் பணியாகும்.

ஒவ்வொரு மாணவருக்கும் பொறுப்புக்களை ஆற்றும் வாய்ப்புக் கிடைக்கும் வகையில் முன்வைப்பைத் திட்டமிட்டுக் கொள்ளுமாறு மாணவரை வழிப்படுத்துதல் பயனுடையதாகும். வழக்கமாக ஆசிரியரின் குரல் ஒலிக்கும் வகுப்பறையில் மாணவரின் குரல் ஓங்கி ஒலிப்பதற்கு வாய்ப்புக் கிடைக்கின்றமை, மாணவர் தாம் கண்டறிந்தவற்றுக்கு விளக்கமளித்தலுடன் (நுஒிடயயெவழைெ) தொடர்புடைய இப்படிமுறையின் சிறப்பியல்பாகும்.

திருவிவிலியம் பற்றிய அறிவு வாழ்க்கைக்கு இன்றியமையாததாகும். எனினும் திருவிவிலிய அறிவு மாத்திரம் வாழ்க்கைக்குப் பயனளிப்பதில்லை. மாறாக அவ்வறிவு வாழ்க்கையில் நடைமுறைப்படுத்தப்படல் வேண்டும். வகுப்பறையில் மட்டுமன்றி அதற்கு வெளியேயும் பின்பற்றப்பட வேண்டும். இதனை எவ்வாறு மேற்கொள்வது என்ற வினாவுக்கு விடை தேடினால் பல்வேறு வழிமுறைகள் மூலம் இதனை மேற்கொள்ளலாம். வகுப்பறையில் கற்கின்ற அம்சங்களும் செயன்முறைகளும் வாழ்க்கையில் நடைமுறைக்கு வர வேண்டும். அப்போது தான் திருதிருவிவிலியம் மீதான பற்று ஏற்படும்.

- திருவிருந்து வழிபாடு ஒன்றை ஏற்பாடு செய்து அதில் ஆர்வத்தோடு பங்கேற்றல்.
- வருடத்தில் பல்வேறு சந்தர்ப்பங்களிலும் நிறைவேற்றும் வழிபாடுகளில் கலந்துகொள்ளல் (உதாரணமாக பெரிய வியாழன், பெரிய வெள்ளி, உயிர்ப்பு ஞாயிறு, நத்தார் போன்றன)
- திருச்சபையின் செயற்பாடுகளில் பங்கேற்றல்
நோயாளி ஒருவரை சந்திக்கச் சென்று ஆறுதற்படுத்தல்
- ஏழைப் பிள்ளைகளுக்கு உடை, உணவு, பானம், புத்தகம், பணம் போன்றவற்றை அன்பளிப்பாக வழங்குதல்.
- முதியோர் இல்லமொன்றுக்குச் சென்று அதனைச் சுத்தம் செய்தல்.
- முதியோருடன் பணிவாகக் கதைப்பதும், அவர்களை உபசரிப்பதும்.
- வழிபாட்டுத் தலங்களுக்குச் சென்று அங்கு இடம் பெறும் திரு வழிபாடுகளில் பங்கேற்றல்.
- செயம், தியானம், திரு வழிபாடுகளில் கலந்து கொள்ளல்.
- ஒரு செயலை ஆரம்பிக்கும் போதும் அதன் முடிவின் போதும் திரு வழிபாடு மேற்கொள்ளல்.

இவ்வாறான வழிமுறைகளைக் கடைப்பிடிப்பதனூடாக வகுப்பறையில் கற்கின்ற அம்சங்களுக்கும் நடைமுறை திருவிவிலிய வாழ்வுக்கும் இடையில் தொடர்புண்டு என்பதை மாணவர்கள் புரிந்து கொள்கின்றனர்.

மேற்கூறப்பட்ட மாதிரிகள் தவிர்ந்த வேறு வழிமுறைகளையும் பின்பற்றுவதற்கான சந்தர்ப்பங்களை மாணவர்களுக்கு ஏற்பாடு செய்து கொடுப்பதற்கு அவகாசத்தை இப்பாடத்திட்டம் ஆசிரியர்களுக்கு வழங்கியுள்ளது.

### 8.2.2 தரவிருத்தி உள்ளீடுகள்

- திருவிவிலியம்
- தரம் 8 பாடநூல்
- படங்கள்
- புகைப்படங்கள்
- தினசரிப் பத்திரிகை
- படங்கள்
- அசிசியூர் பிரான்சிஸ்சின் அமைதி மன்றாட்டு
- ஒலி, ஒளிப்பேழைகள்

**தேர்ச்சி 1.0** : இறைபற்றுடன் நல்வாழ்வு வாழ்வர்.

**தேர்ச்சி மட்டம் 1.1** : பொறுப்புடன் படைப்புகளை பராமரிக்கும் செயற்பாடுகளில் ஈடுபடுவர்.

**செயற்பாடு 1.1** : "பொறுப்புடன் படைப்புகளை பராமரிக்கும் செயற்பாடுகளில் ஈடுபடுவோம்"

**நேரம்** : 80 நிமிடங்கள்

**தரவிருத்தி உள்ளீடுகள்** :

- இணைப்பு 1.1.1 இலுள்ள தகவல் கோவை.
- இணைப்பு 1.1.1 இலுள்ள குழுத்தேடியாய்வு அறிவுறுத்தல் பத்திரம்
- திருவிவிலியம்
- எழுது கடதாசி, நிறப்பேனா

**கற்றல் கற்பித்தல் செயலொழுங்கு**

**படி 1.1.1** :

- இணைப்பு 1.1.1 இலுள்ள தகவல் கோவையை ஓரிரு முறைகள் மாணவர்கள் நன்கு விளங்கும் வண்ணம் வாசியுங்கள்.
- 'பொறுப்பு' பற்றி விளக்குங்கள்.
- 'பொறுப்புடன் படைப்புகளை பராமரித்தல்' தொடர்பான கதைகள், சம்பவங்கள், சிந்தனைகள் போன்றவற்றை பகிர்ந்து கொள்ள மாணவர்களுக்கு இடமளியுங்கள்.
- 'பொறுப்புடன் படைப்புகளை பராமரித்தல்' பற்றிய ஒரு கலந்துரையாடலில் திறந்த மனதுடன் ஈடுபட மாணவர்களுக்கு சந்தர்ப்பமளியுங்கள்.
- பின்வரும் விடயங்களை வலியுறுத்தும் கலந்துரையாடலில் ஈடுபட வழிகாட்டுங்கள்.

> - அனைத்தையும் படைத்தவர் கடவுள் என்பது
> - அனைத்தையும் பராமரிப்பவர் கடவுள் என்பது
> - படைப்புகளை பொறுப்புடன் பராமரிக்கும் பணியில் மனுக்குலம் ஈடுபடவேண்டும் என்பது கடவுளின் எதிர்பார்ப்பு என்பது
> - படைப்புகளை பொறுப்புடன் பராமரிக்கும் போது, மனுக்குலம் பல சவால்களை எதிர்கொள்கின்றது என்பது

10 நிமிடங்கள்

**படி 1.1.2** :

- மாணவர்களை சிறுகுழுக்களாக்குங்கள்.
- குழுத்தேடியாய்வு அறிவுறுத்தல் பத்திரப்பிரதிகளை மாணவர்களுக்கு வழங்குங்கள்.
- தேவையான எழுது கடதாசி, நிறப்பேனா என்பனவற்றை மாணவர்களுக்கு வழங்குங்கள்.
- குழுச்செயற்பாட்டை அவதானித்து உறுதி செய்யுங்கள்.
- அறிக்கைகள் சமர்ப்பிப்பதற்கு குழுக்களை ஆயத்தப்படுத்துங்கள்.

30 நிமிடங்கள்

படி 1.1.3 :

- அறிக்கை சமர்ப்பிக்க குழுக்களை வழிப்படுத்துங்கள்
- அறிக்கையை பூரணப்படுத்த அதே குழுவினருக்கு சந்தர்ப்பமளியுங்கள்.
- ஆக்கபூர்வமான விமர்சனங்களை முன்வைக்க ஏனைய குழுக்களுக்கு இடமளியுங்கள்.
- குழுக்களின் சிந்தனைப்பகிர்வினை தொகுத்து, பின்வரும் கருத்துக்களை இணைத்து, ஆரோக்கியமான கலந்துரையாடலில் ஈடுபடுங்கள்.

- மனிதன் உட்பட முழு உலகமும் 'படைப்பு' என்பது.
- படைப்புகளின் மூலம் (source) 'கடவுள்' (யோபு 33:4; தொடக்க நூல் 1-2) என்பது.
- படைப்புப்பராமரிப்பு மனுக்குலத்தின் கடமை (தொடக்க நூல் 1:28; 2:15) என்பது.
- 'பொறுப்புசார் படைப்புப் பராமரிப்பு' கடவுளின் எதிர்பார்ப்பு என்பது.
- இறைவனுடனான தொடர்ரின் சீர்குலைவினால் பொறுப்புகள் சிதைக்கப்படுகின்றன என்பது.
- படைப்புகளை சுயநலமாக அழித்தல், படைப்புகளை பராமரியாமை... போன்றன இறை எதிர்ப்பு செயல்களே என்பது.
- பொறுப்புகளை நிறைவேற்றுவதற்கு சூழலையும் மனிதனையும் கட்டியெழுப்ப வேண்டும் என்பது.
- 'தொடர் படைப்பு' நடவடிக்கைகளில் ஈடுபடுதல் மூலம் கடவுளின் விருப்பத்தை நிறைவேற்றுகின்றோம் என்பது.

40 நிமிடங்கள்

## கணிப்பீட்டு மதிப்பீட்டு நியதிகள்

1. 'பொறுப்புடன் படைப்புகளை பராமரிப்பது ஆன்மீகசெயல்களே (இறைபணி)' என விளக்குவர்
2. படைப்புகளை அழிக்கும் பொறுப்பற்ற மனித நடவடிக்கைகளைப்பற்றிய கடவுளின் மாறுத்தரம் என்ன என சிந்திப்பர்.
3. படைப்புகளை பொறுப்புடன் பராமரிக்கும் வழிமுறைகள் ஐந்தினை முன்வைப்பர்.
4. பொறுப்புடன் 'தொடர் படைப்பு' நடவடிக்கைகளில் ஈடுபடுவோம் / ஈடுபடுவேன் என தீர்மானமெடுப்பர் (வாழ்வின் மூலம் வெளிப்படுத்தல்).

## தகவல் கோவை — இணைப்பு 1.1.1

மனிதன் உட்பட முழு உலகையும் படைத்தவர் கடவுள் (தொடக்க நூல் 1-2). கடவுளின் படைப்புகள் எல்லாவற்றையும் பொறுப்புடன் பாதுகாப்பதும் பராமரிப்பதும் மனுக்குலத்தின் கடமையாகும் (தொடக்க நூல் 1:28; 2:15). எனவே மனுக்குலம் கடவுளின் முக்கியமான படைப்பு மட்டுமல்ல, எல்லா படைப்புகளையும் பராமரிக்கும் பணியாளர்களாகவும் வாழ வேண்டும்.
பொறுப்பாக படைப்புகளை பராமரிக்கும் போது பல்வேறு சிக்கல்களையும் எதிர்கொள்வது தவிர்க்க முடியாததாகி வருகின்றது. காடுகளை அழித்தல், பாரிய தொழிற்சாலைகளை அமைத்தல்... போன்றன மனித அபிவிருத்திக்கு முக்கியம் என சிலர் கருதுகின்றனர். பொலித்தீன் பை (Shopping bag) பாவனை, சூழல் மாசுறலுக்கும் படைப்புகளின் அழிவுக்கும் காரணம் என்பதை விட பாவனைக்கு எளிதானது என்பதே இன்னும் சிலரால் முக்கியத்துவப்படுத்தப்படுகிறது.



7. S.P.C. 080662

படைப்புகளின் அழிவு மனித அழிவுக்கே வழிவகுக்கும். படைப்புகளை பாவிப்பது தவறல்ல, மாறாக படைப்புகளை பொறுப்புடன் பாவிப்பதன் மூலம் படைப்புகளின் இருப்பு உறுதிப்படுத்தப்பட வேண்டும். வீடுகளை அமைக்க மரங்களை வெட்டுவது தவறல்ல, மாறாக மர நடுகையில் ஈடுபடாமலிருப்பதே தவறாகும்.

கடவுள் அனைத்தையும் படைத்த பின் படைப்புக்கருமத்தில் ஈடுபடாமலிருப்பவரல்ல. இன்றும் கடவுள் படைத்துக் கொண்டிருக்கின்றார் (தொடர் படைப்பு நடவடிக்கைகள்). மனுக்குலமும் கடவுளின் தொடர் படைப்பு நடவடிக்கைகளில் இணைந்து கொள்ள வேண்டும். படைப்பு அழிப்பை விட படைப்புகளின் ஆக்கத்துக்கும் பராமரிப்புக்கும் அதிக முக்கியத்துவம் கொடுக்க வேண்டும். இதன் மூலமே உலக இருப்புக்கும் இறை விருப்புக்கும் உதவ முடியும்.

சீர்குலைந்த படைப்பை சீர்படுத்த மனிதன் உதவ வேண்டுமானால், இறைவனுடனான உறவை சீர்செய்வது முக்கியமாகும். (கொலோசேயர் 1:19-23)

## குழுத்தேடியாய்வு அறிவுறுத்தல் பத்திரம்

**குழுச்செயற்பாட்டுக்கான அறிவுறுத்தல்கள்** **இணைப்பு 1.1.2**

- செயற்பாட்டுப்படிவம் குறித்து குழுக்கள் ஒவ்வொன்றும் அதிக கவனம் செலுத்துங்கள்.
- குழுவினருடன் நன்கு கலந்துரையாடி, திட்டமிட்டு செயற்பாடுகளில் ஈடுபடுங்கள்.
- குழுவினரின் கருத்து வெளிப்பாடுகளை, அறிக்கையாக்கி, வகுப்பில் சமர்ப்பிக்க தயாராகுங்கள்.
- குழுக்களிடையே விவாதம் நடத்துங்கள்.
  "மனுக்குலம் படைப்புகளுக்காகவா? படைப்புகள் மனுக்குலத்துக்காகவா?

**தேர்ச்சி 1.0** : இறைபற்றுடன் நல்வாழ்வு வாழ்வர்.

**தேர்ச்சி மட்டம் 1.2** : குடும்பங்களாக, பொறுப்புடன் படைப்புகளை பராமரிக்கும் செயற்பாடுகளில் ஈடுபடுவர்.

**செயற்பாடு 1.2** : குடும்பங்களாக, பொறுப்புடன் படைப்புகளை பராமரிக்கும் செயற்பாடுகளில் ஈடுபடுவோம்.

**நேரம்** : 80 நிமிடங்கள்.

**தரவிருத்தி உள்ளீடுகள்** :

- இணைப்பு 1.2.1 இலுள்ள தகவல் கோவை.
- இணைப்பு 1.2.2 இலுள்ள குழுத்தேடியாய்வு அறிவுறுத்தல் பத்திரம்.
- திருவிவிலியம்
- எழுது கடதாசி, நிறப்பேனா
- பொறுப்பை நிறைவேற்றும் குடும்பமொண்றின் படம்

**கற்றல் கற்பித்தல் செயலொழுங்கு :**

**படி 1.2.1**

- இணைப்பு 1.2.1 இலுள்ள தகவல் கோவையை ஓரிரு முறைகள் மாணவர்கள் நன்கு விளங்கும் வண்ணம் வாசியுங்கள்.
- 'பொறுப்பை நிறைவேற்றும் குடும்பமொண்றின் படத்தை காட்டி விளக்கி, பொறுப்பான குடும்பங்கள்' பற்றி விளக்குங்கள்.
- குடும்பங்களாக, பொறுப்புடன் படைப்புகளை பராமரித்தல் தொடர்பான கதைகள், சம்பவங்கள், சிந்தனைகள் போன்றவற்றை பகிர்ந்து கொள்ள மாணவர்களுக்கு இடமளியுங்கள்.
- 'குடும்பங்களாக, பொறுப்புடன் படைப்புகளை பராமரித்தல்' பற்றிய ஒரு கலந்துரையாடலில் திறந்த மனதுடன் ஈடுபட மாணவர்களுக்கு சந்தர்ப்பமளியுங்கள்.
- பின்வரும் விடயங்களை வலியுறுத்தும் கலந்துரையாடலில் ஈடுபட வழிகாட்டுங்கள்.

> - சமுதாயத்தின் அடிப்படைஅலகு குடும்பங்கள் என்பது.
> - படைப்புகளை பொறுப்புடன் பராமரிக்கும் பணியில் குடும்பங்கள் ஈடுபடவேன்டும் என்பது கடவுளின் எதிர்பாரப்பு (தொடக்கநூல் 2:15 - ஆதாம்-ஏவாள் குடும்பம்) என்பது
> - படைப்புகளை பொறுப்புடன் பராமரிக்கும் போது, பல சவால்களை குடும்பங்கள் எதிர்கொள்கின்றன என்பது

10 நிமிடங்கள்

**படி 1.2.2** :

- மாணவர்களை சிறுகுழுக்களாக்குங்கள்.
- குழுத்தேடியாய்வு அறிவுறுத்தல் பத்திரப்பிரதிகளை மாணவர்களுக்கு வழங்குங்கள்.
- தேவையான எழுது கடதாசி, நிறப்பேனா என்பனவற்றை மாணவர்களுக்கு வழங்குங்கள்.
- குழுச்செயற்பாட்டை அவதானித்து உறுதி செய்யுங்கள்.
- அறிக்கைகள் சமர்ப்பிப்பதற்கு குழுக்களை ஆயத்தப்படுத்துங்கள்.

30 நிமிடங்கள்

படி 1.2.3 :

- அறிக்கை சமர்ப்பிக்க குழுக்களை வழிப்படுத்துங்கள்
- அறிக்கையை பூரணப்படுத்த அதே குழுவினருக்கு சந்தர்ப்பமளியுங்கள்.
- ஆக்கபூர்வமான விமர்சனங்களை முன்வைக்க ஏனைய குழுக்களுக்கு இடமளியுங்கள்.
- குழுக்களின் சிந்தனைப்பகிர்வினை தொகுத்து, பின்வரும் கருத்துக்களை இணைத்து, ஆரோக்கியமான கலந்துரையாடலில் ஈடுபடுங்கள்.

- குடும்பங்களை உருவாக்கியவர் 'கடவுள்' (தொடக்க நூல் 2; எசாயா 66:9; யோபு 33:6; எபேசியர் 3:14-15) என்பது.
- குடும்பங்கள் தம் வாழ்வுக்காக படைப்புகளை பராமரிப்பது அவசியமானது என்பது.
- 'பொறுப்புணர்வுடன் படைப்புகளை பராமரிக்கும் போது தான், குடும்பங்கள் மனநிறைவுடன் வாழமுடியும் என்பது.
- குடும்பங்களின் எதிர்காலத்துக்கு அதிக முக்கியத்துவம் கொடுப்பது என்பது.
- படைப்புகளை பராமரிப்பது தொடர்பான அறம் சார்ந்த நடவடிக்கைகள் பற்றி குடும்பங்களாக கலந்துரையாடுவதும் பிரார்த்தனையில் ஈடுபடுவதும் அன்றாட நடவடிக்கைகளாக வேண்டும் என்பது.
- பொருளாதார வரலாற்றில் விவசாய யுகம், இயந்திரயுகம், தகவல் தொழிநுட்ப கணனி யுகம், அறிவை மையமாகக் கொண்டு வாழும் காலம் என மாற்றங்கள் ஏற்படுகின்ற நிலையில் படைப்புகளை பராமரிப்பதற்கு குடும்பங்கள் உரிய பங்களிப்பைச் செய்ய வேணடும் என்பது.

40 நிமிடங்கள்

**கணிப்பீட்டு மதிப்பீட்டு நியதிகள்**

1. 'பொறுப்புடன் படைப்புகளை பராமரிப்பது தொடர்பான அடிப்படை நல்மாற்றங்களை சமுதாயத்தின் அடிப்படை அலகான குடும்பத்தில் மேற்கொள்ள வேண்டும்' என விளக்குவர்.
2. வீடுகள் தோறும் மரநடுகை, நாள் தோறும் தாவரங்களுக்கு நீரூற்றல்... போன்ற நடவடிக்கைகளில் எம் நாட்டிலுள்ள குடும்பங்கள் அனைத்தும் ஈடுபடின் என்ன நடக்கும் என சிந்திப்பர்.
3. குடும்பங்கள் படைப்புகளை பொறுப்புடன் பராமரிக்கும் வழிமுறைகள் ஐந்தினை முன்வைப்பர்.
4. எமது / எனது குடும்பத்தவர்கள் படைப்புகளை அழிப்பதை தடுப்பதில் ஈடுபடுவோம் / ஈடுபடுவேன் என தீர்மானமெடுப்பர்.

**தகவல் கோவை** **இணைப்பு 1.2.1**

சமுதாயத்தின் அடிப்படை அலகு குடும்பம் ஆகும். குடும்பங்களின் வாழக்கைமுறை நிச்சயமாக சமுதாயத்தை பாதித்து வருகின்றது. படைப்புகளை பொறுப்புடன் பராமரிக்க வேண்டும் என அனைத்துக்குடும்பங்களும் தீர்மானம் எடுத்தால் உலகம் நிச்சயம் பாதுகாக்கப்படும், கடவுள் அதிகம் மகிழ்ச்சியடைவார்.

மனித வாழ்வு பொருளாதாரத்துடன் மிகவும் தொடர்புடையது. தொடக்க காலத்தில் விவசாயம், விலங்கு வளர்ப்பு... போன்றவற்றில் ஈடுபட்டு படைப்புகளில் நேரடியாக மனுக்குலம் தங்கியிருந்தது. பின்னர் இயந்திரயுகம், தகவல் தொழிநுட்பம் - கணனி யுகம், அறிவுக்கு அதிக முக்கியத்துவம் கொடுக்கும் இன்றைய காலம் போன்றவற்றில் படைப்புகளுக்கு வழங்கப்படும் முக்கியத்துவம் குறைந்து வருகின்றது. இதனால் படைப்புகளுடன் நேரடியாக உறவு வைத்திருப்பது இன்று அருகி வருகின்றது. இச்சூழ்நிலையில் 'படைப்புப்பராமரிப்பு' பற்றிய தேவையை வலியுறுத்தி விழிப்புணர்வை ஊட்டுவதும், மரநடுகை போன்றவற்றிலீடுபட்டு உலகை பாதுகாப்பதும் ஒவ்வொரு குடும்பங்களதும் அன்றாட மன்றாட்டு போன்றதாகும்.

## குழுத்தேடியாய்வு அறிவுறுத்தல் பத்திரம்

**இணைப்பு 1.2.2**

### குழுச்செயற்பாட்டுக்கான அறிவுறுத்தல்கள்

- செயற்பாட்டுப்படிவம் குறித்து குழுக்கள் ஒவ்வொன்றும் அதிக கவனம் செலுத்துங்கள்.
- குழுவினருடன் நன்கு கலந்துரையாடி, திட்டமிட்டு செயற்பாடுகளில் ஈடுபடுங்கள். குழுவினரின் கருத்து வெளிப்பாடுகளை, அறிக்கையாக்கி, வகுப்பில் சமர்ப்பிக்க தயாராகுங்கள்

1. குடும்பங்களின் பொறுப்பற்ற செயற்பாடுகளால் புலம்பும் படைப்புகளின் கண்ணீர்க்கதைகள் சிலவற்றை பகிர்ந்து கொள்ளுங்கள்.
2. 'படைப்புப்பராமரிப்பு மனுக்குல கடமை' எனும் சிந்தனையை நடைமுறைப்படுத்துவதும், பிறருடன் பகிர்ந்து கொள்வதும் குடும்பங்களின் பணி என தீர்மானம் எடுங்கள்.
3. படைப்புகளை பராமரிக்கும் பணியிலீடுபட்டிருக்கும் சில இயக்கங்களையும் நிறுவனங்களையும் அடையாளம் காணுங்கள்.
4. கடவுளின் படைப்புகளை பராமரித்தல் தொடர்பான ஒரு குடும்ப மன்றாட்டை எழுதுங்கள்.



8. S.P.C. 080662

**தேர்ச்சி 1.0** : இறைபற்றுடன் நல்வாழ்வு வாழ்வர்.

**தேர்ச்சி மட்டம் 1.3** : சமுகங்களாக, பொறுப்புடன் படைப்புகளை பராமரிக்கும் செயற்பாடுகளில் ஈடுபடுவர்.

**செயற்பாடு 1.3** : சமூகங்களாக, பொறுப்புடன் படைப்புகளை பராமரிக்கும் செயற்பாடுகளில் ஈடுபடுவோம்.

**நேரம்** : 80 நிமிடங்கள்.

**தரவிருத்தி உள்ளீடுகள்** :

- இணைப்பு 1.2.1 இலுள்ள தகவல் கோவை.
- இணைப்பு 1.2.2 இலுள்ள குழுத்தேடியாய்வு அறிவுறுத்தல் பத்திரம்
- திருவிவிலியம்
- எழுது கடதாசி, நிறப்பேனா

**கற்றல் கற்பித்தல் செயலொழுங்கு :**

**படி 1.3.1**

- இணைப்பு 1.3.1 இலுள்ள தகவல் கோவையை ஓரிரு முறைகள் மாணவர்கள் நன்கு விளங்கும் வண்ணம் வாசியுங்கள்.
- 'படைப்பை பராமரிக்கும் பொறுப்பான சமூகங்கள்' பற்றி விளக்குங்கள்.
- 'சமூகங்களாக, பொறுப்புடன் படைப்புகளை பராமரித்தல்' பற்றிய ஒரு கலந்துரையாடலில் திறந்த மனதுடன் ஈடுபட மாணவர்களுக்கு சந்தர்ப்பமளியுங்கள்.
- பின்வரும் விடயங்களை வலியுறுத்தும் கலந்துரையாடலில் ஈடுபட வழிகாட்டுங்கள்.

> - சமூகங்களின் இருப்புக்கும், சமூக உறவுகளுக்கும் படைப்புகள் அவசியம் என்பது.
> - சமுகங்களின் வாழ்வு சிறக்க கடவுள் படைப்புகளை அளித்து பராமரிக்கின்றார் ( திருப்பாடல்கள் 65: 9-13; 104; யோபு 31: 38-40; இணைச்சட்டம் 32:13-14; மலாக்கி 2:10) என்பது
> - சமுகங்கள் படைப்புகளை பொறுப்புடன் பராமரிக்கும் போது, பல சவால்களை எதிர்கொள்கின்றன என்பது

10 நிமிடங்கள்

**படி 1.3.2** :

- மாணவர்களை சிறுகுழுக்களாக்குங்கள்.
- குழுத்தேடியாய்வு அறிவுறுத்தல் பத்திரப்பிரதிகளை மாணவர்களுக்கு வழங்குங்கள்.
- தேவையான எழுது கடதாசி, நிறப்பேனா என்பனவற்றை மாணவர்களுக்கு வழங்குங்கள்.
- குழுச்செயற்பாட்டை அவதானித்து உறுதி செய்யுங்கள்.
- அறிக்கைகள் சமர்ப்பிப்பதற்கு குழுக்களை ஆயத்தப்படுத்துங்கள்.

30 நிமிடங்கள்

படி 1.3.3 :

- அறிக்கை சமர்ப்பிக்க குழுக்களை வழிப்படுத்துங்கள்
- வேறு பொருத்தமான கருத்துக்களை வெளிக்கொணர அதே குழுவினருக்கு சந்தர்ப்பமளியுங்கள்.
- ஆக்கபூர்வமான விமர்சனங்களை முன்வைக்க ஏனைய குழுக்களுக்கு இடமளியுங்கள்.
- குழுக்களின் சிந்தனைப்பகிர்வினை தொகுத்து, பின்வரும் கருத்துக்களை இணைத்து, ஆரோக்கியமான கலந்துரையாடலில் ஈடுபடுங்கள்.

- படைப்புகளை பொறுப்புடன் பராமரிக்க கடவுள் இறைமக்களான சமுகங்களை அழைக்கின்றார் (உதாரணம்: இஸ்ரயேலர்) என்பது.
- தேசங்களுக்கு ஒளியாகி பெலவீனர்களைப் பெலப்படுத்தும் பணியை இஸ்ரயேலரின் வரலாற்றில் காணலாம் என்பது.
- சமுகங்கள் படைப்புகளை பராமரிப்பதற்கு முக்கியத்துவம் அளிக்க வேண்டும் என்பது.
- 'பொறுப்புணர்வுடன் படைப்புகளை பராமரிப்பது சமுகங்களின் மரபுகள் / பாரம்பரியங்களுடன் தொடர்புபட்டது (உதாரணங்கள்: கோலமிடல் - எறும்புகளுக்கும் உணவூட்டும் சமுக வாழ்வு; இயற்கையுடன் இணைந்த வாழ்வு...; 'குருளு பாலுவ' – குருவிகளுக்கு உணவு கிடைக்கும்படி நெல் வயலில் அரிவு வெட்டாமல் விடல்;) என்பது.
- சமுகங்களின் எதிர்கால வாழ்வை மனதிற் கொண்டு படைப்புகளை பராமரிப்பது தொடர்பான விழிப்புணர்வை ஏற்படுத்துவதும் இயக்கங்களை தொடங்குவதும் இன்றைய சமுகத்தின் கடமை என்பது.

40 நிமிடங்கள்

**கணிப்பீட்டு மதிப்பீட்டு நியதிகள்**

1. 'பொறுப்புடன் படைப்புகளை பராமரிப்பது தொடர்பான சமுதாயத்தின் பங்கை' விளக்குவர்.
2. படைப்புப்பராமரிப்பு நடவடிக்கைகளில் ஈடுபடுவதன் மூலம் சமுகம் எத்தகைய உலகை எண்ணவேண்டும் என சிந்திப்பர்.
3. சமுகங்கள் படைப்புகளை பொறுப்புடன் பராமரிக்கும் வழிமுறைகள் ஐந்தினை முன்வைப்பர்.
4. படைப்புகளை அழிப்போரை தடுப்பதில் ஈடுபடுவோம் / ஈடுபடுவேன் என தீர்மானமெடுப்பர்.

## தகவல் கோவை

**இணைப்பு 1.3.1**

கடவுள் இஸ்ரயேல் சமுகத்தை மாதிரி சமுகமாக வாழ அழைத்திருந்தார் என்பதை திருவிவிலியம் விளக்குகின்றது. கடவுளின் படைப்புகளை பராமரிப்பதும் பாதுகாப்பதும் கூட இந்த அழைப்புக்கு உத்தரவாதமாக வாழ்வதில் அடங்கும்.

இஸ்ரயேல் சமுகத்தைப் போலவே உலக மக்கள் அனைவரையும் கடவுள் நற்சமுகமாக வாழ்ந்து இறைபடைப்பை நன்கு பொறுப்புடன் பராமரிக்க நித்தமும் அழைக்கின்றார். இந்த அழைப்புக்கு ஏற்ப இறைபடைப்பை பராமரித்து சமுகமாக வாழ்வது எல்லாச் சமுகங்களதும் கடமையாகும்.

ஒவ்வொரு சமுகத்துக்கும் உள்ள நல்ல மரபுகளை பின்பற்றி இயற்கையுடன் இணைந்து வாழ்வது நிச்சயம் படைப்புகளை பராமரிக்க உதவும். தமிழர் கலாசாரத்தின் படி கோலமிடல் படைப்பு பராமரிப்புடனும், படைப்பு பராமரிப்பின் அடிப்படை விழுமியங்களுடனும் தொடர்புடையது. இல்லறவாழ்வில் ஈடுபடுவோர் அரிசிமா கோலம் மூலம் எறும்புகளுக்கு உணவூட்டுகின்றனர். எறும்பு போன்றவற்றை மதிப்பதும் உணவூட்டுவதும் படைப்பு பராமரிப்பாகும். குருவிகளுக்கு உணவு கிடைக்கும்படி நெல் வயலில் அரிவு வெட்டாமல் ஒரு குறிப்பிட்ட வயற்பகுதியை விடல் கூட எம்நாட்டு உழவர்களின் மரபாகும் ('குருளு பாலுவ').

இன்றைய அபிவிருத்தி பற்றி மட்டும் எண்ணி எதிர்கால சந்ததியை பலர் மறந்து விடுகின்றனர். சிலரின் சுயநல இலாப மைய வேலைத்திட்டங்கள் பூகோளவெப்பநிலை உயர்வுக்கு காரணமாகியுள்ளன. பூகோளவெப்பநிலை உயர்வு மனுக்குல எதிர்கால வாழ்வை கேள்விக்குறியாக்கிவருகின்றது. எனவே எதிர்கால சந்ததியின் வாழ்வுக்காகவும் படைப்பு பராமரிப்புக்காகவும் சமுகம் பணியாற்றுவது இன்றைய அவசர தேவையாகும்.

## குழுத்தேடியாய்வு அறிவுறுத்தல் பத்திரம்

**இணைப்பு 1.3.2**

### குழுச்செயற்பாட்டுக்கான அறிவுறுத்தல்கள்

- செயற்பாட்டுப்படிவம் குறித்து குழுக்கள் ஒவ்வொன்றும் அதிக கவனம் செலுத்துங்கள்.
- குழுவினருடன் நன்கு கலந்துரையாடி, திட்டமிட்டு செயற்பாடுகளில் ஈடுபடுங்கள்.
- குழுவினரின் கருத்து வெளிப்பாடுகளை, அறிக்கையாக்கி, வகுப்பில் சமர்ப்பிக்க தயாராகுங்கள்.

1. சமுக உணர்வற்றவர்களின் பொறுப்பற்ற செயற்பாடுகளால் அழியும் படைப்பகள் பற்றி பகிர்ந்து கொள்ளுங்கள்.
2. 'படைப்புப்பராமரிப்பு பற்றிய சமுக விழிப்புணர்வை வழங்கும் பணி பற்றி தீர்மானம் எடுங்கள்.
3. சமுக மட்டத்தில் படைப்புகளை பராமரிக்கும் பணியிலீடுபட்டிருக்கும் சில இயக்கங்கள் / நிறுவனங்கள் எதிர்கொள்ளும் சவால்களை அடையாளம் காணுங்கள்.
4. கடவுளின் படைப்புகளை பராமரித்தல் தொடர்பான ஒரு சுவரொட்டி / பத்திரிகைக்கு கடிதம் எழுதுங்கள்.

**தேர்ச்சி 1.0** : இறைபற்றுடன் நல்வாழ்வு வாழ்வர்.

**தேர்ச்சி மட்டம் 1.4** : பொறுப்புடன் சூழலை பராமரிக்கும் செயற்பாடுகளில் ஈடுபடுவர்

**செயற்பாடு 1.4** : பொறுப்புடன் சூழலை பராமரிக்கும் செயற்பாடுகளில் ஈடுபடுவோம்.

**நேரம்** : 80 நிமிடங்கள்.

**தரவிருத்தி உள்ளீடுகள்** :

- இணைப்பு 1.4.1 இலுள்ள தகவல் கோவை.
- இணைப்பு 1.4.2 இலுள்ள குழுத்தேடியாய்வு அறிவுறுத்தல் பத்திரம்
- திருவிவிலியம்
- எழுது கடதாசி, நிறப்பேனா
- சுழல் மாசுறல் பற்றிய படங்கள்

**கற்றல் கற்பித்தல் செயலொழுங்கு :**

**படி 1.4.1**

- இணைப்பு 1.4.1 இலுள்ள தகவல் கோவையை ஓரிரு முறைகள் மாணவர்கள் நன்கு விளங்கும் வண்ணம் வாசியுங்கள்.
- 'சூழல்' பற்றி விளக்குங்கள்.
- சூழல் மாசுறல் பற்றிய படங்களை காட்டி, சூழல் பராமரித்தல் தொடர்பான கதைகள், சம்பவங்கள், சிந்தனைகள் போன்றவற்றை பகிர்ந்து கொள்ள மாணவர்களுக்கு இடமளியுங்கள்.
- 'சூழல் பராமரிப்பு' பற்றிய ஒரு கலந்துரையாடலில் திறந்த மனதுடன் ஈடுபட மாணவர்களுக்கு சந்தர்ப்பமளியுங்கள்.
- பின்வரும் விடயங்களை வலியுறுத்தும் கலந்துரையாடலில் ஈடுபட வழிகாட்டுங்கள்.

> - சூழலை பாதுகாத்து பராமரிப்பது மனுக்குலத்தின் கடமை என்பது.
> - கடவுள் உருவாக்கிய சூழல் மனுக்குல வாழ்வின் உயர்வுக்கு அவசியம் (திருப்பாடல்கள் 67: 6; 85:12; 145:8-11;) என்பது
> - மனுக்குலம் சூழலை மாசுறச் செய்கின்றது என்பது

10 நிமிடங்கள்

**படி 1.4.2** :

- மாணவர்களை சிறுகுழுக்களாக்குங்கள்.
- குழுத்தேடியாய்வு அறிவுறுத்தல் பத்திரப்பிரதிகளை மாணவர்களுக்கு வழங்குங்கள்.
- தேவையான எழுது கடதாசி, நிறப்பேனா என்பனவற்றை மாணவர்களுக்கு வழங்குங்கள்.
- குழுச்செயற்பாட்டை அவதானித்து உறுதி செய்யுங்கள்.
- அறிக்கைகள் சமர்ப்பிப்பதற்கு குழுக்களை ஆயத்தப்படுத்துங்கள்.

30 நிமிடங்கள்



9. S.P.C. 080662

படி 1.4.3 :

- அறிக்கை சமர்ப்பிக்க குழுக்களை வழிப்படுத்துங்கள்
- வேறு பொருத்தமான கருத்துக்களை வெளிக்கொணர அதே குழுவினருக்கு சந்தர்ப்பமளியுங்கள்.
- ஆக்கபூர்வமான விமர்சனங்களை முன்வைக்க ஏனைய குழுக்களுக்கு இடமளியுங்கள்.
- குழுக்களின் சிந்தனைப்பகிர்வினை தொகுத்து, பின்வரும் கருத்துக்களை இணைத்து, ஆரோக்கியமான கலந்துரையாடலில் ஈடுபடுங்கள்.

- சூழல் மாசடைதலால் மனுக்குலம் மட்டுமல்ல முழு உலகமும் நிச்சயமற்ற எதிர்காலத்தை எதிர்கொண்டு வருகின்றது என்பது.
- நிலம், நீர், வளி மாசடைவது எப்படி என்பதை விளக்கும் தொடர்ந்தேட்சையான விழிப்புணர்வு நிகழ்வுகளில் மனுக்குலம் ஈடுபடவேண்டும் என்பது.
- நிலம், நீர், வளி மாசடைவதை தடுப்பதற்காக பொறுப்புணர்வுடன் மனுக்குலம் செயற்படுவது பக்தியின் வெளிப்பாடு என்பது.
- சிலரின் அறியாமை, சுயநலவாதிகள் பலரின் சூழலை மாசுறச்செய்யும் திட்டமிடப்பட்ட செயற்பாடுகள் போன்றவற்றை தடுக்க மனுக்குலம் இணைந்து செயற்பட வேண்டும் என்பது.

40 நிமிடங்கள்

**கணிப்பீட்டு மதிப்பீட்டு நியதிகள்**

1. 'சூழல் மாசடைதல் மனுக்குல இருப்பை கேள்விக்குறியாக்கி விட்டது' என்பதை விளக்குவர்.
2. அணுக்குண்டு உற்பத்தியும் பரிசோதனைகளும், போர் நடவடிக்கைகளும் கடவுள் படைத்த உலகை அழிக்கின்றது என சிந்திப்பர்.
3. மனுக்குலம் சூழலை பொறுப்புடன் பராமரிக்கும் வழிமுறைகள் ஐந்தினை முன்வைப்பர்.
4. சூழலை அழிப்போரை தடுப்பதில் ஈடுபடுவோம் / ஈடுபடுவேன் என தீர்மானமெடுப்பர்.

## தகவல் கோவை

**இணைப்பு 1.4.1**

சூழல் மாசடைதல் மனுக்குலத்தின் இருப்பையே கேள்விக்குறியாக்கி விட்டது. இதனால் மனிதர்கள் உட்பட அனைத்து உயிரினங்களும் அன்றாடம் சாவை எதிர்நோக்கி வருகின்றனர். நிலம், நீர், வளி மாசுறலால் கொடிய நோய்கள், பெருந்தொகையான கடல் உயிரினங்களின் சாவு, நச்சுவாயுக்களின் அதிகரிப்பு போன்ற பலவற்றால் இயற்கைச் சமநிலை பாதிக்கப்படுகின்றது. இது மனுக்குல வாழ்வை ஆபத்துக்குள்ளாக்கி விட்டது.

இப்பிரச்சனை மனுக்குலத்தின் பொறுப்பற்ற நடவடிக்கைகளாலேயே ஏற்பட்டது மட்டுமல்ல, இன்றும் தொடர்கின்றது. இந்த பொறுப்பற்ற செயல்கள் அறத்துக்கும் கடவுளுக்கும் எதிரானது. உலகைப் படைக்கும் முழுமையான ஆற்றலற்ற மனுக்குலம், சூழல் பாதுகாப்பில் போதுமான அக்கறையின்றி வாழ்வதும், சூழலை மாசுறச் செய்வதும் கடவுளுக்கு எதிரானவையே. எனவே சூழல் மாசடைதல் தவிர்ப்பு நடவடிக்கைகள் கடவுளின் விருப்பச் செயல்களாக நோக்கப்படும்.

போர், அணுக்குண்டு - ஏவுகணைப் பரிசோதனைகள் போன்றன பாரியளவில் சூழலை மாசடையச் செய்கின்றது. இத்தகைய நடவடிக்கைகளை தடுப்பதற்கு உரிய எதிர்ப்பு நடவடிக்கைகள் உலகளாவிய மட்டத்தில் கூட்டாக முன்னெடுக்கப்பட வேண்டும்.

சூழல் பாதுகாப்பு ஒரு கடவுள் நம்பிக்கை தொடர்பான விடயம். சூழல் மாசுறலை தடுத்து இறை படைப்புகளை சுயநலமின்றி பாதுகாப்பதன் மூலம் கடவுளுக்கு விருப்பமானவர்களாக மனுக்குலம் வாழவேண்டும்.

## குழுத்தேடியாய்வு அறிவுறுத்தல் பத்திரம்

இணைப்பு 1.4.2

### குழுச்செயற்பாட்டுக்கான அறிவுறுத்தல்கள்

- செயற்பாட்டுப்படிவம் குறித்து குழுக்கள் ஒவ்வொன்றும் அதிக கவனம் செலுத்துங்கள்.
- குழுவினருடன் நன்கு கலந்துரையாடி, திட்டமிட்டு செயற்பாடுகளில் ஈடுபடுங்கள்.
- குழுவினரின் கருத்து வெளிப்பாடுகளை, அறிக்கையாக்கி, வகுப்பில் சமர்ப்பிக்க தயாராகுங்கள்.

1. மனுக்குலத்தின் பொறுப்பற்ற செயற்பாடுகளால் இடம்பெறும் சூழல் மாசடைதல் பற்றி பகிர்ந்து கொள்ளுங்கள்.
2. 'சூழல் பாதுகாப்பு பற்றிய சமுக விழிப்புணர்வை வழங்கும் பணி பற்றி தீர்மானம் எடுங்கள்.
3. பாடசாலை மட்டத்தில் சூழல் மாசடைதல் தவிர்ப்பு / தடுப்பு பணிகளிலீடுபட்டிருப்பவர்களுடன் இணைந்து செயற்படுங்கள்
4. கடவுளின் சூழலை மனுக்குலம் பராமரிக்க வேண்டும் என்பது தொடர்பான பதாதை / கடிதம் ஒன்றை சூழல் மாசடைதலில் ஈடுபடுவோரை மனதிற்கொண்டு எழுதுங்கள்.

**தேர்ச்சி 1.0** : இறைபற்றுடன் நல்வாழ்வு வாழ்வர்.
**தேர்ச்சி மட்டம் 1.5** : பொறுப்புடன் வளங்களை பராமரித்து அழிவுகளை நிறுத்த செயற்படுவர்.
**செயற்பாடு 1.5** : பொறுப்புடன் வளங்களை பராமரித்து அழிவுகளை நிறுத்த செயற்படுவோம்.
**நேரம்** : 80 நிமிடங்கள்.
**தரவிருத்தி உள்ளீடுகள்** :

- இணைப்பு 1.5.1 இலுள்ள தகவல் கோவை.
- இணைப்பு 1.5.2 இலுள்ள் குழுத்தேடியாய்வு அறிவுறுத்தல் பத்திரம்
- திருவிவிலியம்
- எழுது கடதாசி, நிறப்பேனா

**கற்றல் கற்பித்தல் செயலொழுங்கு** :
**படி 1.5.1**

- இணைப்பு 1.5.1 இலுள்ள தகவல் கோவையை ஓரிரு முறைகள் மாணவர்கள் நன்கு விளங்கும் வண்ணம் வாசியுங்கள்.
- 'உலக வளங்கள்' பற்றி விளக்குங்கள்.
- வளங்களை பொறுப்புடன் பராமரித்தல் தொடர்பான கதைகள், சம்பவங்கள், சிந்தனைகள் போன்றவற்றை பகிர்ந்து கொள்ள மாணவர்களுக்கு இடமளியுங்கள்.
- 'வளங்களும் பொறுப்புள்ள மனுக்குலமும்' பற்றிய ஒரு கலந்துரையாடலில் திறந்த மனதுடன் ஈடுபட மாணவர்களுக்கு சந்தர்ப்பமளியுங்கள்.
- பின்வரும் விடயங்களை வலியுறுத்தும் கலந்துரையாடலில் ஈடுபட வழிகாட்டுங்கள்.

| |
|---|
| • வளங்களை பாதுகாத்து பராமரிப்பது மனுக்குலத்தின் கடமை என்பது.<br>• கடவுள் உருவாக்கிய வளங்கள் மனுக்குல வாழ்வின் உயர்வுக்கு அவசியம் என்பது<br>• மனுக்குலம் வளங்களை அதி உச்ச பயனை பெறுவதற்காக பாவிக்கின்றது என்பது |

10 நிமிடங்கள்

**படி 1.5.2** :

- மாணவர்களை சிறுகுழுக்களாக்குங்கள்.
- குழுத்தேடியாய்வு அறிவுறுத்தல் பத்திரப்பிரதிகளை மாணவர்களுக்கு வழங்குங்கள்.
- தேவையான எழுது கடதாசி, நிறப்பேனா என்பனவற்றை மாணவர்களுக்கு வழங்குங்கள்.
- குழுச்செயற்பாட்டை அவதானித்து உறுதி செய்யுங்கள்.
- அறிக்கைகள் சமர்ப்பிப்பதற்கு குழுக்களை ஆயத்தப்படுத்துங்கள்.

30 நிமிடங்கள்

படி 1.5.3 :

- அறிக்கை சமர்ப்பிக்க குழுக்களை வழிப்படுத்துங்கள்
- வேறு பொருத்தமான கருத்துக்களை வெளிக்கொணர அதே குழுவினருக்கு சந்தர்ப்பமளியுங்கள்.
- ஆக்கபூர்வமான விமர்சனங்களை முன்வைக்க ஏனைய குழுக்களுக்கு இடமளியுங்கள்.
- குழுக்களின் சிந்தனைப்பகிர்வினை தொகுத்து, பின்வரும் கருத்துக்களை இணைத்து, ஆரோக்கியமான கலந்துரையாடலில் ஈடுபடுங்கள்.

- வளங்கள் மனுக்குல வாழ்வுக்காக கடவுளால் தரப்பட்டவை (எசாயா 45:8-12;) என்பது.
- வளங்களை இறைவிருப்புக்கு எதிராக பாவித்தலால் அழிவை எதிர்கொள்ள வேண்டியுள்ளது (சபைஉரையாளர் 7:29; தொடக்கநூல் 11:1-9) என்பது.
- இறைவன் மனிதனுக்குக் கொடுத்துள்ள கொடைகளை நாம் பாதுகாக்க வேண்டும் என்பது (லூக். 19:11-27)
- வளங்கள் (படைப்புகள்) முழு நிறைவடைய கடவுள் அருள் பொழிகின்றார் (உரோமையர் 8:18-25) என்பது.
- வளங்கள் இறை திட்டத்துக்கு மாறாக பாவிக்கப்படக்கூடாது (அணுக்குண்டு பரிசோதனைக்கு கடலை பாவித்தல்) என்பது.
- மனுக்குல நன்மைக்காக உலக வளங்களை அனைவருடனும் பகிர்ந்து, உரிய முறையில் பாவிக்க வேண்டும் ( தேயிலைத் தோட்டத்தில் வேலை செய்வோர் நல்ல தேயிலையை பாவிக்க நடவடிக்கைகள் எடுக்கப்பட வேண்டும்) என்பது.

40 நிமிடங்கள்

**கணிப்பீட்டு மதிப்பீட்டு நியதிகள்**

1. 'உலக வளங்கள் மனுக்குல மேம்பாட்டுக்காக கடவுளால் அருளப்பட்டவை' என்பதை விளக்குவர்.
2. 'கடவுளின் ஈவுகளாகிய வளங்களை மனுக்குலம் தவறாக பாவிப்பதால், கடவுள் படைத்த உலகில் அழிவு வந்திருக்கின்றது' என சிந்திப்பர்.
3. மனுக்குலம் வளங்களை பொறுப்புடன் பராமரிக்கும் வழிமுறைகள் ஐந்தினை முன்வைப்பர்.
4. வளங்களை சுயநலத்துக்கு பாவிப்போரையும் அழிப்போரையும் எச்சரிப்பதிலும் தடுப்பதிலும் ஈடுபடுவோம் / ஈடுபடுவேன் என தீர்மானமெடுப்பர்.

## தகவல் கோவை

**இணைப்பு 1.5.1**

உலக வளங்கள் அனைத்தும் கடவுளால் படைக்கப்பட்டவை (எசாயா 45:8-12). அவற்றை இறைதிட்டத்துக்கு மாறாக நேர்மையின்றி பாவிப்பதால் மட்டுமே மனுக்குலம் அழிவுகளை எதிர்கொள்கின்றது (சபை உரையாளர் 7:29). முக்கியமாக சுயபெருமையையும் அகங்காரத்தையும் வெளிக்காட்டவும் உறுதி செய்யவும் மேற்கொள்ளப்படும் எந்த ஒரு நடவடிக்கையும் ஒருபோதும் நன்மை தராது. இதனை 'பாபேல் கோபுரம்' நிகழ்வு (தொடக்கநூல் 11:1-9) நன்கு விளக்குகின்றது. தமது பெயரை உலகெங்கும் நிலைநாட்ட வானளாவிய கோபுரத்துடனான கட்டடம் மனுக்குலத்தால் கட்டப்பட்டது. சுயபெருமை பறைசாற்றலை விரும்பாத கடவுள் மனுக்குல திட்டத்தை சீர்குலைத்தார். எனவே இறையாட்சிக்கு எதிரான விழுமியங்களின் அடிப்படையில் மேற்கொள்ளப்படும் எந்த ஒரு வளப்பாவிப்பும் நன்மை தராது.

மனுக்குலம் கடவுள் தந்திருக்கும் வளங்கள் அனைத்தையும் நன்மையான விதத்தில் சுயநலம் சாராமல் பாவிப்பது முக்கியம். அத்துடன் வளங்களை இன்று பாவிக்கும் முறை எதிர்காலத்தை பாதிக்காத வண்ணம் அமையவேண்டும்.

வளங்களை பாவித்து நல்ல பயனை அனைவரும் பெறக்கூடிய வண்ணம், விழிப்புணர்வும் வளங்கள் பாதுகாப்பு தொடர்பான பணியிலீடுபடும் நிறுவனங்கள்/இயக்கங்களுடன் தொடர்பும் ஏற்படுத்தப்பட வேண்டும்.

**தேர்ச்சி 2.0** : இயேசுவின் வாழ்வின்படி வாழ்வர்.

**தேர்ச்சி மட்டம் 2.1** : இயேசுவின் தொடக்க கால திருப்பணி மாதிரியை பொறுப்புடன் பின்பற்றுவர்.

**செயற்பாடு 2.1** : இயேசுவின் தொடக்க கால திருப்பணி மாதிரியை பொறுப்புடன் பின்பற்றுவோம்.

**நேரம்** : 80 நிமிடங்கள்.

**தரவிருத்தி உள்ளீடுகள்** :

- இணைப்பு 2.1.1 இலுள்ள தகவல் கோவை.
- இணைப்பு 2.1.2 இலுள்ள குழுத்தேடியாய்வு அறிவுறுத்தல் பத்திரம்
- திருவிவிலியம்
- எழுது கடதாசி, நிறப்பேனா

**கற்றல் கற்பித்தல் செயலொழுங்கு** :

**படி 2.1.1**

- இணைப்பு 2.1.1 இலுள்ள தகவல் கோவையை ஓரிரு முறைகள் மாணவர்கள் நன்கு விளங்கும் வண்ணம் வாசியுங்கள்.
- 'இயேசுவின் தொடக்க கால பணி' பற்றி விளக்குங்கள்.
- இயேசுவின் தொடக்க கால பணியை சித்தரிக்கும் படத்தை காட்டி, விளக்கும்படி மாணவர்களுக்கு இடமளியுங்கள்.
- ''இயேசுவின் தொடக்க கால பணியும் நாமும்' பற்றி கலந்துரையாடலில் திறந்த மனதுடன் ஈடுபட மாணவர்களுக்கு சந்தர்ப்பமளியுங்கள்.
- பின்வரும் விடயங்களை வலியுறுத்தும் கலந்துரையாடலில் ஈடுபட வழிகாட்டுங்கள்.

> - இயேசுவின் தொடக்க கால திருப்பணி திருமுழுக்கு யோவானின் திருப்பணியுடன் நெருங்கிய தொடர்புடையது என்பது.
> - 'கடவுளுடைய ஆட்சி' பற்றிய அறிவிப்புடன் இயேசுவின் திருப்பணி ஆரம்பித்தது என்பது.
> - மனம் மாறி கடவுளுடைய ஆட்சியை ஏற்பது பற்றிய தெளிவான போதனைகளை இயேசு முன்வைத்தார் என்பது.
> - இயேசு திருமுழுக்கு பெற்ற பின் சோதிக்கப்பட்டார் என்பது.
> - நாசரேத்து தொழுகைக்கூடத்தில் இயேசு அருளுரையாற்றி, வேறுபட்ட மாறுத்தரங்களை எதிர்கொண்டார் என்பது.

10 நிமிடங்கள்

**படி 2.1.2** :

- மாணவர்களை சிறுகுழுக்களாக்குங்கள்.
- குழுத்தேடியாய்வு அறிவுறுத்தல் பத்திரப்பிரதிகளை மாணவர்களுக்கு வழங்குங்கள்.
- தேவையான எழுது கடதாசி, நிறப்பேனா என்பனவற்றை மாணவர்களுக்கு வழங்குங்கள்.
- குழுச்செயற்பாட்டை அவதானித்து உறுதி செய்யுங்கள்.
- அறிக்கைகள் சமர்ப்பிப்பதற்கு குழுக்களை ஆயத்தப்படுத்துங்கள்.

30 நிமிடங்கள்

படி 2.1.3 :

- அறிக்கை சமர்ப்பிக்க குழுக்களை வழிப்படுத்துங்கள்
- வேறு பொருத்தமான கருத்துக்களை வெளிக்கொணர அதே குழுவினருக்கு சந்தர்ப்பமளியுங்கள்.
- ஆக்கபூர்வமான விமர்சனங்களை முன்வைக்க ஏனைய குழுக்களுக்கு இடமளியுங்கள்.
- குழுக்களின் சிந்தனைப்பகிர்வினை தொகுத்து, பின்வரும் கருத்துக்களை இணைத்து, ஆரோக்கியமான கலந்துரையாடலில் ஈடுபடுங்கள்.

- இயேசுவின் தொடக்க கால பணி அன்றைய சமூகத்துக்கு பொருத்தமாக இருந்தது என்பது.
  அரசியல் நிலை – உரோமய ஆதிக்கம்
  சமய நிலை – பரிசேயர்-சதுசேயர் ஆதிக்கம்
  பொருளாதார நிலை – ஒடுக்குமுறை
  (ஏழைகள், பெண்கள், சிறுவர், இடையர்கள்... ...........................).
- கடவுளுடைய ஆட்சி மைய திருப்பணியை முன்வைத்ததன் மூலம் அர்த்தம் நிறைந்த இறைபணியை வெளிப்படுத்தினார் என்பது.
  இயேசு சோதனைகளை மேற்கொண்டமை – மத்தேயு 4:1-11.
- மனுக்குலத்தின் முழுவாழ்வு நோக்கிய மனமாற்றத்தை இயேசு திருமுழுக்கு யோவானைத் தொடர்ந்து முன்வைத்தார் என்பது.
- இயேசுவின் தொடக்ககால திருப்பணியை மாதிரியாகக் கொண்டு மனுக்குல வாழ்வின் உயர்வு பற்றி நோக்க வேண்டும் என்பது.

40 நிமிடங்கள்

**கணிப்பீட்டு மதிப்பீட்டு நியதிகள்**

1 'இயேசு திருப்பணியை தொடங்கியமை'பற்றி அன்றைய பின்னனி அடிப்படையில் விளக்குவர்.
2. 'இயேசு திருப்பணியை தொடங்கிய போது எதிர்கொண்ட அனுபவங்களை (உதாரணம்: சோதனைகள் மத்தேயு 4:1-11)' என சிந்திப்பர்.
3. ஒடுக்குமுறையின் மத்தியில் இருந்த மக்களுக்கு இயேசுவின் திருப்பணி எப்படி அர்த்தம் தந்தது என நிகழ்வுகள் ஐந்தினை முன்வைப்பர்.
4 இயேசுவைப்போல பொருத்தமான திருப்பணியில் ஈடுபடுவோம் / ஈடுபடுவேன் என தீர்மானமெடுப்பர்.

## தகவல் கோவை

**இணைப்பு 2.1.1**

இயேசுவின் தொடக்ககால திருப்பணி அன்றைய பலஸ்தீனா நாட்டுக்கு முக்கியமான ஒரு திருப்பத்தை அளித்தது. உரோமய ஆதிக்கவாதிகளின் ஒடுக்குமுறையின் கீழ் யூதர்கள் துன்புற்றனர். பரிசேயர் சதுசேயர் போன்ற யூதசமயவாதிகளின் போலி ஆன்மீக திணிப்பில் வேதனைப்பட்டனர். ஏழைகள், இடையர், பெண்கள், சிறுவர்கள், தொழுநோயாளர்கள் ... போன்றோர் ஒதுக்கப்பட்டனர். இச்சூழ்நிலையில் இயேசு கடவுளின் ஆட்சி பற்றி பறைசாற்றி தன் திருப்பணியை தொடங்கி பெரும் திருப்பத்தை ஏற்படுத்தினார்.

'மனமாற்றம்' பற்றி இயேசு அதிக அழுத்தம் கொடுத்தார். திருமுழுக்கு யோவானைப் போலவே மனம் மாறி, இறை விருப்பத்தை நாடி முழு வாழ்வையடைய அழைத்தார். பல்வேறுபட்ட சவால்களுக்கு மத்தியிலும் கடவுளுடைய ஆட்சிக்குரிய விழுமியங்களின் அடிப்படையில், உரிய முறையில் செயற்பட்டார்.

இதற்கு இயேசு சோதனைகளை மேற்கொண்டமை பொருத்தமான உதாரணமாகும் (மத்தேயு 4:1 11).எல்லா மக்களையும் கடவுளுக்குள் கொண்டு வர பொருத்தமான வழி எது என்பதில் இயேசு தெளிவான முடிவுக்கு வந்தார் என்பதை மத்தேயு 4:1-11 நன்கு விளக்குகின்றது. புதுமை செய்வதன் மூலமோ (4:3-4), தன்னை வீரன் என நிறுவுவதன் மூலமோ (4:6), தீமைக்கு அடிபணிந்து அதனை அங்கீகரிப்பதன் மூலமோ (4:9-10) மக்களை கடவுளுக்குள் கொண்டு வர இயேசு விரும்பவில்லை. கடவுளுடைய ஆட்சி நோக்கிய மனமாற்றத்துக்கான அழைப்பை இயேசு முன்வைத்து திருப்பணியை தொடங்கியமை நல்லுள்ளத்தினருக்கு நற்செய்தியாகவும், தீயவுள்ளத்தினருக்கு துர்ச்செய்தியாகவும் அமைந்தது. இத்தொடக்க கால திருப்பணி கடவுளை அனைவரும் நன்கு புரிந்து கொள்ள உதவியது.

## குழுத்தேடியாய்வு அறிவுறுத்தல் பத்திரம்

**இணைப்பு 2.1.**

### குழுச்செயற்பாட்டுக்கான அறிவுறுத்தல்கள்

- செயற்பாட்டுப்படிவம் குறித்து குழுக்கள் ஒவ்வொன்றும் அதிக கவனம் செலுத்துங்கள்.
- குழுவினருடன் நன்கு கலந்துரையாடி, திட்டமிட்டு செயற்பாடுகளில் ஈடுபடுங்கள்.
- குழுவினரின் கருத்து வெளிப்பாடுகளை, அறிக்கையாக்கி, வகுப்பில் சமர்ப்பிக்க தயாராகுங்கள்.

1. இயேசுவின் தொடக்க கால திருப்பணியின் பின்னனி பற்றி பகிர்ந்து கொள்ளுங்கள்.
2. ‘சோதனைகளை இயேசு மேற்கொண்டது போல, கடவுளின் விருப்பத்துக்கு இணங்க செயற்பட தீர்மானம் எடுங்கள்.
3. மனமாற்றம் பற்றி விளக்குங்கள்.
4. இயேசுவின் தொடக்க கால பணியை மையப்படுத்தும் நிகழ்வொண்றை கவிதை/பாடல்/கதை குறுநாடகம் வழி எழுதுங்கள்.

**தேர்ச்சி 2.0** : இயேசுவின் வாழ்வின்படி வாழ்வர்.

**தேர்ச்சி மட்டம் 2.2** : இயேசு சமுகத்தின் வாழ்க்கை முறையின்படி வாழ நடவடிக்கை எடுப்பர்.

**செயற்பாடு 2.2** : இயேசு சமுகத்தின் வாழ்க்கை முறையின்படி வாழ நடவடிக்கை எடுப்போம்.

**நேரம்** : 80 நிமிடங்கள்.

**தரவிருத்தி உள்ளீடுகள்** :

- இணைப்பு 2.2.1 இலுள்ள தகவல் கோவை.
- இணைப்பு 2.2.2 இலுள்ள குழுத்தேடியாய்வு அறிவுறுத்தல் பத்திரம்
- திருவிவிலியம்
- எழுது கடதாசி, நிறப்பேனா

**கற்றல் கற்பித்தல் செயலொழுங்கு** :

**படி 2.2.1.** :

- இணைப்பு 2.1.1 இலுள்ள தகவல் கோவையை ஓரிரு முறைகள் மாணவர்கள் நன்கு விளங்கும் வண்ணம் வாசியுங்கள்.
- 'இயேசு-சமுகம்' பற்றி விளக்குங்கள்.
- இயேசு-சமுக வாழ்க்கைமுறை பற்றிய மாணவர்களின் சிந்தனைகளை பகிர்ந்து கொள்ள இடமளியுங்கள்.
- "இயேசு சமுகமும் நாமும்" பற்றி கலந்துரையாடலில் திறந்த மனதுடன் ஈடுபட மாணவர்களுக்கு சந்தர்ப்பமளியுங்கள்.
- பின்வரும் விடயங்களை வலியுறுத்தும் கலந்துரையாடலில் ஈடுபட வழிகாட்டுங்கள்.

> - இயேசுவை பின்பற்றி வாழ்வோர் 'இயேசு-சமுகம்' என அழைக்கப்பட்டனர் என்பது.
> - இயேசுவின் பன்னிரு சீடர்களும், இயேசு- சமுகத்தில் முதலில் இணைந்து வாழ்ந்தவர்கள் (மத்தேயு 4:18-22, மாற்கு 3:13-19) என்பது.
> - இயேசுவை பின்பற்றும் நாமும் இன்றைய இயேசு- சமுகமே என்பது.

10 நிமிடங்கள்

**படி 2.2.2** :

- மாணவர்களை சிறுகுழுக்களாக்குங்கள்.
- குழுத்தேடியாய்வு அறிவுறுத்தல் பத்திரப்பிரதிகளை மாணவர்களுக்கு வழங்குங்கள்.
- தேவையான எழுது கடதாசி, நிறப்பேனா என்பனவற்றை மாணவர்களுக்கு வழங்குங்கள்.
- குழுச்செயற்பாட்டை அவதானித்து உறுதி செய்யுங்கள்.
- அறிக்கைகள் சமர்ப்பிப்பதற்கு குழுக்களை ஆயத்தப்படுத்துங்கள்.

30 நிமிடங்கள்

**படி 2.2.3** :

- அறிக்கை சமர்ப்பிக்க குழுக்களை வழிப்படுத்துங்கள்
- வேறு பொருத்தமான கருத்துக்களை வெளிக்கொணர (குறைநிரப்பு) அதே குழுவினருக்கு சந்தர்ப்பமளியுங்கள்.
- ஆக்கபூர்வமான விமர்சனங்களை முன்வைக்க ஏனைய குழுக்களுக்கு இடமளியுங்கள்.



11. S.P.C. 080662

- குழுக்களின் சிந்தனைப்பகிர்வினை தொகுத்து, பின்வரும் கருத்துக்களை இணைத்து, ஆரோக்கியமான கலந்துரையாடலில் ஈடுபடுங்கள்.

> - இயேசுவின் மதிப்பீடுகளில் வாழ்பவர்கள் அனைவரும் இயேசு-சமுகமாக கருதப்பட்டனர் / கருதப்படுகின்றனர் என்பது.
> - 'இயேசு-சமுக' (Jesus Community) வாழ்வுக்காக அழைக்கப்பட்டவர்கள் புதிய அடையாளத்தையும் (மத்தேயு 4:19) புதிய எதிர்பார்ப்பையும் (மத்தேயு 4:21-22) பெற்றனர் என்பது.
> - 'இயேசு-சமுக' வாழ்வை ஏற்றுக் கொண்டவர்களுக்கு புதிய பணிகள் அளிக்கப்பட்டன (மாற்கு 3:13-14) என்பது.
>   இயேசுவுடன் இருத்தல்
>   நற்செய்தியை பறைசாற்றல்
>   தீயோரை (பேய்களை) வெளியேற்றல்
> - இயேசு-சமுகமாக வாழ்வதன் மூலம் மனுக்குலம் புதியதாகின்றது.
> - இயேசு-சமுகத்தில் தொடக்கத்தில் இணைந்து கொண்ட பலர் வேறுபட்ட பின்னனிகளைச்சேர்ந்தோர் என்பது.

40 நிமிடங்கள்

**கணிப்பீட்டு மதிப்பீட்டு நியதிகள்**

1. 'இயேசு-சமுகம்' பற்றி விளக்குவர்.
2. 'இயேசு-சமுக' வாழ்க்கை முறையை சிந்தித்து குறிப்பிடுவர்.
3. இயேசு-சமுக பண்புகள் ஐந்தை முன்வைப்பர்.
4. இயேசுவின் விருப்பத்தை நிறைவேற்றும் இயேசு சமுகத்தவர் நாம் / நான் என தீர்மானித்து இன்று செய்ய வேண்டிய அவசர பணிகள் சிலவற்றை எழுதுவர்.

## தகவல் கோவை

**இணைப்பு 2.2.1.**

இயேசுவை நம்பி, அவரை பின்பற்றி வாழ்வோர் அனைவரும் 'இயேசு-சமுகம்' என அழைக்கப்பட்டனர். இயேசுவின் மதிப்பீடுகள் இவர்களின் வாழ்வில் வெளிப்படுவதை அனைவரும் நோக்க முடியும்.

இயேசுவின் பன்னிரு சீடர்களும் இயேசு-சமுகத்தின் முன்னோடிகள் ஆவர் (மாற்கு 3:13-19). இவர்கள் தம்முடன் இருக்கவும், நற்செய்தி அறிவிப்பு பணியில் ஈடுபடவும், பேய்களை (தீமையை) வெளியேற்றவும் பணித்தார். 'திருத்தூதர்கள்' என புதிய பெயரையும் இவர்களுக்கு இட்டார் (லூக்கா 6:13). அத்துடன் முக்கியமாக முதற் சீடர்களை அழைத்த பொழுது புதிய அடையாளத்தையும் (மத்தேயு 4:19), புதிய எதிர்பார்ப்பையும் (மத்தேயு 4:21-22) அளித்தார். 'மனிதரைப்பிடிப்பவர்' எனும் புதிய அடையாளம் 'மனிதம் நிறை இயேசு-சமுகத்தை' குறிக்கும். நாளாந்த பணிகளை விட்டுவிட்டு இயேசு-சமுகத்தை நோக்கி வந்தவர்களுக்கு புதிய எதிர்பார்ப்பு காணப்பட்டது. வலைகளை பழுதுபார்ப்பது, வலைகளை வீசுவது எனும் நாளாந்த பணிகளை விட முக்கிய பணியான 'இயேசு-சமுக வாழ்க்கை அமைத்தல்' இங்கு முக்கியத்துவப்படுத்தப்படுகின்றது. இயேசுவின் காலத்தில் ஒடுக்குதலுக்குள்ளாக துன்புற்ற இஸ்ரயேல் சமுகத்தை விடுவிக்கும் பணி இயேசு சமுகத்தை சாந்திருந்தது. இப்பணிக்கு தம்மை ஒப்படைத்தவர்கள் வாழ்வு தரும் ஆன்மீகத்துடன் வாழ்ந்தனர்.

இன்றும் இயேசுவின் மதிப்பீடுகளுடன் வாழ்வோர் அனைவரும் 'இயேசு சமுகம்' என கருதப்படுகின்றனர். இவர்களின் முன்மாதிரியான வாழ்வு தீயோருக்கு சவாலாக உள்ளது.

## குழுத்தேடியாய்வு அறிவுறுத்தல் பத்திரம்

இணைப்பு 2.2.2.

**குழுச்செயற்பாட்டுக்கான அறிவுறுத்தல்கள்**

- செயற்பாட்டுப்படிவம் குறித்து குழுக்கள் ஒவ்வொன்றும் அதிக கவனம் செலுத்துங்கள்.
- குழுவினருடன் நன்கு கலந்துரையாடி, திட்டமிட்டு செயற்பாடுகளில் ஈடுபடுங்கள்.
- குழுவினரின் கருத்து வெளிப்பாடுகளை, அறிக்கையாக்கி, வகுப்பில் சமர்ப்பிக்க தயாராகுங்கள்.

1. 'இயேசு-சமுகம்' என்றால் என்ன என விளக்குங்கள்.
2. இன்று இயேசு-சமுகத்தினரின் பணிகள் எவை எனக்கூறுங்கள்.
3. இயேசு-சமுகத்தின் அழைப்பை கதை/கவிதை/நாடகம்/சித்திரம் மூலம் வெளிப்படுத்துங்கள்
4. இயேசு-சமுகத்தில் இணைகிறேன்/ இணைகிறோம் எனும் தீர்மானத்தை, செய்ய விரும்பும் சில பணிகள் மூலம் தெளிவுபடுத்துங்கள்.



12. S.P.C. 080662

**தேர்ச்சி 2.0** : இயேசுவின் வாழ்வின்படி வாழ்வர்.

**தேர்ச்சி மட்டம் 2.3** : இயேசு-சமுக வாழ்க்கை முறையை பொறுப்புடன் பின்பற்றி, பெண்கள், சிறுவர், வயோதிபர், மாற்றுவலுவுள்ளோர்... போன்றோரின் வாழ்வில் நல்மாற்றத்தை ஏற்படுத்த வழிசமைப்பர்.

**செயற்பாடு 2.3** : இயேசு-சமுக வாழ்க்கை முறையை பொறுப்புடன் பின்பற்றி, பெண்கள், சிறுவர், வயோதிபர், மாற்றுவலுவுள்ளோர்... போன்றோரின் வாழ்வில் நல்மாற்றத்தை ஏற்படுத்த வழிசமைப்போம்.

**நேரம்** : 160 நிமிடங்கள்.

**தரவிருத்தி உள்ளீடுகள்** :

- இணைப்பு 2.1.1 இலுள்ள தகவல் கோவை.
- இணைப்பு 2.1.2 இலுள்ள குழுத்தேடியாய்வு அறிவுறுத்தல் பத்திரம்
- திருவிவிலியம்
- எழுது கடதாசி, நிறப்பேனா

**கற்றல் கற்பித்தல் செயலொழுங்கு :**

**படி 2.3.1.**

- இணைப்பு 2.3.1 இலுள்ள தகவல் கோவையை ஓரிரு முறைகள் மாணவர்கள் நன்கு விளங்கும் வண்ணம் வாசியுங்கள்.
- 'செய்தித்தாள் தகவல்களை பாவித்து, பெண்கள், சிறுவர், வயோதிபர், மாற்றுவலுவுள்ளோர்...' போன்றோரின் நிலை பற்றி விளக்குங்கள்.
- பெண்கள், சிறுவர், வயோதிபர், மாற்றுவலுவுள்ளோர்... போன்றோர் வாழ்வுக்கு இயேசு சமுகம் செய்ய வேண்டியவை எவை என பகிர மாணவர்களுக்கு இடமளியுங்கள்.
- "பாதிக்கப்பட்டவர்களுக்கு இயேசு சமுகத்தின் பணி" என்பது பற்றிய கலந்துரையாடலில் திறந்த மனதுடன் ஈடுபட மாணவர்களுக்கு சந்தர்ப்பமளியுங்கள்.
- பின்வரும் விடயங்களை வலியுறுத்தும் கலந்துரையாடலில் ஈடுபட வழிகாட்டுங்கள்.

> - ஒடுக்கப்பட்ட நிலையில் துன்புறும் பெண்கள், சிறுவர், வயோதிபர், மாற்றுவலுவுள்ளோர்... அனைவரும் இயேசு சமுகத்தின் பணிபால் நன்மையடைய வேண்டியவர்கள் என்பது.
> - மேற்குறிப்பிடப்பட்டவர்களுக்காக இயேசு சமுகம் உழைத்துள்ளது என்பது.
>   (லூக்கா 8:1-5, 23:26-31, யோவான் 8:1-11, லூக்கா 2:52, மத்தேயு 18:1-5, 19:13-15, நீதிமொழிகள் 20:7, எபேசியர் 6:1-4, திருப்பாடல்கள் 71, இணைச்சட்டம் 5:16, யோவான் 5:1-9, மத்தேயு 8:1-4)
> - இத்தகையோருடைய நல்வாழ்வுக்காக நாம் செயற்படவேண்டும் என்பது.

20 நிமிடங்கள்

படி 2.3.2 :

- மாணவர்களை சிறுகுழுக்களாக்குங்கள்.
- குழுத்தேடியாய்வு அறிவுறுத்தல் பத்திரப்பிரதிகளை மாணவர்களுக்கு வழங்குங்கள்.
- தேவையான எழுது கடதாசி, நிறப்பேனா என்பனவற்றை மாணவர்களுக்கு வழங்குங்கள்.
- குழுச்செயற்பாட்டை அவதானித்து உறுதி செய்யுங்கள்.
- அறிக்கைகள் சமர்ப்பிப்பதற்கு குழுக்களை ஆயத்தப்படுத்துங்கள்.

60 நிமிடங்கள்

படி 2.3.3 :

- அறிக்கை சமர்ப்பிக்க குழுக்களை வழிப்படுத்துங்கள்
- வேறு பொருத்தமான கருத்துக்களை வெளிக்கொணர அதே குழுவினருக்கு சந்தர்ப்பமளியுங்கள்.
- ஆக்கபூர்வமான விமர்சனங்களை முன்வைக்க ஏனைய குழுக்களுக்கு இடமளியுங்கள்.
- குழுக்களின் சிந்தனைப்பகிர்வினை தொகுத்து, பின்வரும் கருத்துக்களை இணைத்து, ஆரோக்கியமான கலந்துரையாடலில் ஈடுபடுங்கள்.

- பாதிக்கப்பட்ட பெண்கள், சிறுவர், வயோதிபர்கள், மாற்றுவலுவுள்ளோர்... போன்றோர் கடவுளுடைய ஆட்சியின் வாரிசுகள் என்பது.
- இயேசு-சமுகம் இத்தகையோரின் உயர்வுக்காக சிந்தித்து செயற்பட்டது என்பது.

| | | |
|---|---|---|
| பெண்கள் | - | லூக்கா 8:1-5, 23:26-31<br>யோவான் 8:1-11, |
| சிறுவர் | - | மத்தேயு 18:1-5, லூக்கா 2:52,<br>மத்தேயு 19:13-15, நீதிமொழிகள் 20:7,<br>எபேசியர் 6:1-4, |
| வயோதிபர் | - | திருப்பாடல்கள் 71,<br>இணைச்சட்டம் 5:16, |
| மாற்றுவலுவுள்ளோர் | - | யோவான் 5:1-9,<br>மத்தேயு 8:1-4 |

பாதிக்கப்பட்டவர்களுக்கு உதவுவது மட்டுமல்ல பாதிப்பு ஏற்படாமல் தடுப்பதும் இன்றைய இயேசு - சமுக பணி என்பது.

80 நிமிடங்கள்

**கணிப்பீட்டு மதிப்பீட்டு நியதிகள்**

1. மத்தேயு 25:31-46 விவிலியப்பகுதியை அடிப்படையாகக் கொண்டு பாதிக்கப்பட்ட பெண்கள், சிறுவர், வயோதிபர்கள், மாற்றுவலுவுள்ளோர்... பற்றி இயேசு-சமுகம் எப்படி சிந்திக்க வேண்டும் என சிந்தித்து எழுதுவர்.
2. மேற்குறிப்பிட்ட நிலையிலுள்ளோருக்கு செய்யப்படும் உதவிகள் ஐந்தினை முன்வைப்பர்.
3. இத்தகையோருக்கு உதவுவோம் / உதவுவேன் என தீர்மானமெடுத்து மேற்கொள்ளவுள்ள செயற்பாட்டை விளக்குங்கள்.
4. 'பாதிப்படைந்தோருக்கு உதவுவது மட்டும் போதாது, பாதிப்பு ஏற்படாமல் இருக்க செயற்பட வேண்டும்' என்பது பற்றி விளக்குங்கள்.

இயேசுவின் பணி எப்பொழுதும் பாதிக்கப்பட்டவர்களுடன் இணைக்கப்பட்டது. பெண்கள், சிறுவர், வயோதிபர்கள், மாற்றுவலுவுள்ளோர்... போன்றோருக்கு முக்கியத்துவம் கொடுத்து செயற்பட்டவர் இயேசு. இயேசு-சமுகம், இயேசு வழி தொடர்ந்ததை தொடக்க கால திருச்சபை வரலாறு கூறுகின்றது.

இயேசு வாழ்ந்த பலஸ்தீனா ஒரு ஆணாதிக்க சமுதாயம். எனினும் இயேசு ஆண் சீடர்களைப்போலவே பெண் சீடர்களையும் கொண்டிருந்தார் (லூக்கா 8:1-5). இத்தகையோருள் மகதலா மரியா, யோவன்னா, சூசன்னா போன்றவர்கள் முக்கியமானவர்கள். இவர்கள் இயேசுவை பின்பற்றியது மட்டுமல்ல, தங்கள் உடைமைகளை அவரது பணிக்காக பாவித்தனர். வேறு பெண்களும் இயேசுவை பின்பற்றி வந்தனர் (லூக்கா 23:26-31). அத்துடன் விபசாரத்தில் பிடிபட்ட பெண்ணை (யோவான் 8:1-11) கொலை செய்ய வந்தவர்களை இயேசு சவாலிட்டார். 'பாவமில்லாதவர்கள் தண்டனை வழங்கட்டும் என்று இயேசு கூறியது இங்கு குறிப்பிடத்தக்கது. பெண்களை ஒடுக்குவது தவறு, அவர்களும் மனித நேயத்துடன் நோக்கப்பட வேண்டும் என்பதில் இயேசு உறுதியாக இருந்தார்.

இயேசு சிறுவர்களையும் மனித நேயத்துடன் மதித்தார். தன்னைப் போலவே (லூக்கா 2:52) எல்லா சிறுவர்களும் நன்கு வளர வேண்டும் என்பதில் இயேசுவுக்கு விருப்பம் இருந்தது. முக்கியமாக மனுக்குலம், சிறுவர்களை மாதிரியாக கொண்டு வாழ வேண்டும் (மத்தேயு 18:1-5) என போதித்தார். சிறுவர்கள் எப்போதும் பிறரில் தங்கி வாழ்வதை விரும்புவோரும் அங்கீகரிப்போருமாவர். எனவே 'சிறுபிள்ளைகளின் ஆன்மீகத்துடன்' கடவுளில் தங்கி வாழ்வோரே இறையாட்சிக்குள் செல்ல முடியும் என்பதில் இயேசு தெளிவாக இருந்தார். இறையாட்சியின் வாரிசுகள் சிறுவர்கள் என்பதில் (மத்தேயு 19:13-15) இயேசு உறுதியாக இருந்தார். பிள்ளைகளை, எரிச்சலூட்டாது கடவுளுக்கு உரிய முறையில் வளர்க்க வேண்டும் (எபேசியர் 6:1-4) என பவுல் அடிகளாரும் வலியுறுத்தினார்.

வயோதிபர்களை பராமரிப்பதும் பாதுகாப்பதும் கூட சமுதாயத்தின் முக்கிய கடமையாகும் (இணைச்சட்டம் 5:16). வயோதிபர்கள் கடவுளிடம் ஆழமான பற்றுறுதி கொண்டிருந்தனர் (திருப்பாடல்கள் 71). வயோதிபர்களை முழுமனதுடன் கவனியாது, ஆலயத்துக்கு காணிக்கை செலுத்தி, தம் 'கடமை தீர்ந்தது' என எண்ணியோரை இயேசு சவாலுக்குட்படுத்தினார் (மாற்கு 7:10-13).

இயேசு மாற்றுவலுவுள்ளவர்கள் சுகமாக உதவினார் (யோவான் 5:1-9). தொழுநோயாளிகள் சமுதாயத்தை விட்டு புறக்கணிக்கப்பட்ட போது, இயேசு அவர்களை சுகமாக்கி, அவர்களின் மனிதத் தன்மை மதிக்கப்பட உதவினார் (மத்தேயு 8:1-4). உபயோகமற்றோர் என சமுதாயம் தள்ளி வைத்தோரை இயேசு எப்போதும் மனித நேயத்துடன் மதித்தார். (லூக்கா 19:1-10). இயேசு அனைவரையும் நோக்கியது போல இவர்களையும் உரிய மதிப்புடன் அனுகினார்.

மேற்குறிப்பிடப்பட்டவர்கள் போன்ற பலர் இன்றும் பல்வேறுபட்ட முறையில் ஒடுக்கப்படுகின்றனர். போர், வறுமை... போன்ற பல்வேறு சிக்கல்களால் இவர்கள் வேதனைப்படுகின்றனர். மனித நேயமற்ற சூழ்நிலைகளில் துன்புறுவோருக்கு உதவுவதும், மனிதநேயமற்ற சூழ்நிலைகள் ஏற்படாமல் இருக்க உழைப்பதும் இயேசு-சமுகத்தின் பணியாகும். இப்பணி தொடர்ந்தேட்சையாக நடைபெறும் போது மட்டும் தான் பெண்கள், சிறுவர், வயோதிபர்கள், மாற்றுவலுவுள்ளோர்... போன்றோர் மனிதத்துடன் மதிக்கப்படும் காலம் உருவாகும்.

## குழுத்தேடியாய்வு அறிவுறுத்தல் பத்திரம்

இணைப்பு 2.3.2

### குழுச்செயற்பாட்டுக்கான அறிவுறுத்தல்கள்

- செயற்பாட்டுப்படிவம் குறித்து குழுக்கள் ஒவ்வொன்றும் அதிக கவனம் செலுத்துங்கள்.
- குழுவினருடன் நன்கு கலந்துரையாடி, திட்டமிட்டு செயற்பாடுகளில் ஈடுபடுங்கள்.
- குழுவினரின் கருத்து வெளிப்பாடுகளை, அறிக்கையாக்கி, வகுப்பில் சமர்ப்பிக்க தயாராகுங்கள்.
- இயேசு சமுகத்தின் இன்றைய பணி 'சமுக சேவையா? சமுக மாற்றமா? என விவாதம் நடத்துங்கள்.

**தேர்ச்சி 2.4** : இயேசுவின் வாழ்வின்படி வாழ்வர்.

**தேர்ச்சி மட்டம் 2.4** : அழிவுக்குப் பலியானவர்கள் சிறக்க இயேசு-சமுக விழுமியங்களின் படி நடவடிக்கை எடுப்பர்.

**செயற்பாடு 2.4** : அழிவுக்குப் பலியானவர்கள் சிறக்க இயேசு-சமுக விழுமியங்களின் படி நடவடிக்கை எடுப்போம்.

**நேரம்** : 80 நிமிடங்கள்.

**தரவிருத்தி உள்ளீடுகள்** :

- இணைப்பு 2.4.1 இலுள்ள தகவல் கோவை.
- இணைப்பு 2.4.2 இலுள்ள குழுத்தேடியாய்வு அறிவுறுத்தல் பத்திரம்
- திருவிவிலியம்
- எழுது கடதாசி, நிறப்பேனா

**கற்றல் கற்பித்தல் செயலொழுங்கு** :

**படி 2.4.1.**

- இணைப்பு 2.4.1 இலுள்ள தகவல் கோவையை ஓரிரு முறைகள் மாணவர்கள் நன்கு விளங்கும் வண்ணம் வாசியுங்கள்.
- 'அழிவுகளால் பாதிக்கப்பட்டவர்கள்' பற்றி விளக்குங்கள்.
- அழிவுகளால் பாதிக்கப்பட்டவரகளின் அனுபவங்களைக் கூறி, அவை பற்றிய சிந்தனைகளை பகிர்ந்து கொள்ள மாணவர்களுக்கு இடமளியுங்கள்.
- 'அழிவுகளால் பாதிக்கப்பட்டவர்களின் வாழ்வு மீண்டும் கட்டி எழுப்பப்படுவதற்கு என்ன செய்யலாம்' என்பது பற்றி கலந்துரையாடலில் திறந்த மனதுடன் ஈடுபட மாணவர்களுக்கு சந்தர்ப்பமளியுங்கள்.
- பின்வரும் விடயங்களை வலியுறுத்தும் கலந்துரையாடலில் ஈடுபட வழிகாட்டுங்கள்.

> - 'சுனாமி' போன்ற இயற்கை அழிவுகளும், 'போர்' போன்ற செயற்கை அழிவுகளும் ஏற்படுகின்றன என்பது.
> - இத்தகைய அழிவுகளால் பாதிக்கப்பட்ட சமுகங்களின் மீள்கட்டுமானம் தொடர்பாக இயேசு- சமுகம் செயற்பட வேண்டும் என்பது.
> - அழிவுகளால் உறவுகளையும் உடைமைகளையும் இழந்தவர்கள் நிலையை உயர்த்த வேண்டும் என்பது.

10 நிமிடங்கள்

**படி 2.4.2** :

- மாணவர்களை சிறுகுழுக்களாக்குங்கள்.
- குழுத்தேடியாய்வு அறிவுறுத்தல் பத்திரப்பிரதிகளை மாணவர்களுக்கு வழங்குங்கள்.
- தேவையான எழுது கடதாசி, நிறப்பேனா என்பனவற்றை மாணவர்களுக்கு வழங்குங்கள்.
- குழுச்செயற்பாட்டை அவதானித்து உறுதி செய்யுங்கள்.
- அறிக்கைகள் சமர்ப்பிப்பதற்கு குழுக்களை ஆயத்தப்படுத்துங்கள்.

30 நிமிடங்கள்

படி 2.4.3 :

- அறிக்கை சமர்ப்பிக்க குழுக்களை வழிப்படுத்துங்கள்
- வேறு பொருத்தமான கருத்துக்களை வெளிப்படுத்த அதே குழுவினருக்கு சந்தர்ப்பமளியுங்கள்.
- ஆக்கபூர்வமான விமர்சனங்களை முன்வைக்க ஏனைய குழுக்களுக்கு இடமளியுங்கள்.
- குழுக்களின் சிந்தனைப்பகிர்வினை தொகுத்து, பின்வரும் கருத்துக்களை இணைத்து, ஆரோக்கியமான கலந்துரையாடலில் ஈடுபடுங்கள்.

- மனுக்குல அழிவு கடவுளின் திட்டமோ / விருப்பமோ அல்ல என்பது.
- போர், சுனாமி… போன்ற பாரிய அழிவுகளால் இழப்புகளை சந்தித்தோர், இழப்புகளை சந்திக்காதவர்களை விட பாவிகள் என கருதுவது தவறு (லூக்கா 13:1-5) என்பது.
- மனித விழுமியங்களை அடிப்படையாகக் கொண்டு சமுகவாழ்வை திட்டமிட்டு, இறைபற்றுடன் வாழ்வது அழிவுகளை குறைக்க அல்லது நீக்க வழி என்பது.
- அழிவுகளால் பாதிக்கப்பட்டவர்களுடன் கடவுள் இருக்கின்றார் என்பதற்கு சான்றாக இன்றைய இயேசு-சமுகம் பணியாற்ற வேண்டும் எனபது.

40 நிமிடங்கள்

**கணிப்பீட்டு மதிப்பீட்டு நியதிகள்**

1. அழிவுகளை எவ்வாறு நோக்கவேண்டும் என்பதை விளக்குவர்.
2. அழிவுகளால் பாதிக்கப்பட்டவர்களின் வாழ்வை உயர்த்தவும் அழிவுகளை தடுப்பதற்கும் எடுக்கக்கூடிய நடவடிக்கைகளை முன்வைப்பர்
3. அழிவுகளால் பாதிக்கப்பட்டவர்களுக்கு உதவும் இயக்கங்கள் / நிறுவனங்கள் / அமைப்புகள் ஐந்தினை கூறுவர்.
4. அழிவுகளை தடுக்க/குறைக்க எடுக்க வேண்டிய நடவடிக்கைகள் சிலவற்றை விளக்குவர்.

## தகவல் கோவை

**இணைப்பு 2.4.1**

வெள்ளம், மண்சரிவு, சுனாமி, போர், விபத்துக்கள்… போன்ற பாரிய அழிவுகளால் மனுக்குலம் பல இழப்புகளை சந்தித்து வருகிறது. அழிவுகளால் பல்வேறுபட்ட சிக்கல்களை பலர் எதிர்நோக்குகின்றனர். உறவினர்கள் நண்பர்களின் இழப்பு, உடைமைகளின் இழப்பு, நம்பிக்கையின்மை, விரக்தி, வறுமை… என்பன இந்த அழிவுகளால் ஏற்படுகின்றன.
அழிவுகளை நேரடியாக சந்திக்காத பலர், அழிவுகள் கடவுளின் சித்தம் எனவும், இவை கடவுளால் அவர்களுக்கு வழங்கப்பட்ட தண்டனை எனவும் கூறுகின்றனர். கடவுள் அழிவின் கடவுள் அல்ல மாறாக கடவுள் அன்பு நிறைந்தவர். துன்புறுவோருடன் தன்னை அடையாளப்படுத்தி, அவர்கள் வாழ்வுக்காக செயற்படுபவர் (லூக்கா 13:1-5; மத்தேயு 25:31-46).
அழிவுகளால் பாதிக்கப்பட்டவர்களுக்கு உதவுவது அவசரமான தேவை. 'நல்ல சமாரியன்' போல தனிப்பட்டவர்கள், நிறுவனங்கள், இயக்கங்கள், அரசு போன்றன இப்பணியில் ஈடுபட்டு வருகின்றன. அழிவுகளிலிருந்து மனுக்குலத்தை காப்பாற்ற பல திட்டங்கள் முன்வைக்கப்பட வேண்டும். இயற்கை அழிவுகள் (சுனாமி…) ஏற்படும் போது அவற்றிலிருந்து தப்புவதற்கான பாதுகாப்பு நடவடிக்கைகள் (உதாரணம்: அபாய அறிவிப்பு…) மேற்கொள்ளப்படவேண்டும். போர் போன்ற அழிவுகள் ஏற்படாமலிருக்க அகிம்சை, சமாதானமான வழிகளில் பிரச்சினைகளை தீர்த்தல், நீதியோடு கூடிய

அமைதிக்கான கட்டமைப்புகளை ஏற்படுத்தல்... போன்றவை பற்றிய விழிப்புணர்வும் செயற்பாடுகளும் முக்கியமானவையாகும்.

அழிவுகளால் பாதிக்கப்படுவோருக்கு உதவுவதுடன் மட்டும் இன்றைய இயேசு சமுகம் திருப்தியடைய முடியாது. அழிவுகள் ஏற்படுவதை தடுக்க மனித விழுமியங்களுடன் கூடிய சமுக வாழ்வை ஏற்படுத்த, உரிய நடவடிக்கைகளில் ஈடுபடவேண்டும்.

## குழுத்தேடியாய்வு அறிவுறுத்தல் பத்திரம்

**இணைப்பு 2.4.2**

**குழுச்செயற்பாட்டுக்கான அறிவுறுத்தல்கள்**

- செயற்பாட்டுப்படிவம் குறித்து குழுக்கள் ஒவ்வொன்றும் அதிக கவனம் செலுத்துங்கள்.
- குழுவினருடன் நன்கு கலந்துரையாடி, திட்டமிட்டு செயற்பாடுகளில் ஈடுபடுங்கள்.
- குழுவினரின் கருத்து வெளிப்பாடுகளை, அறிக்கையாக்கி, வகுப்பில் சமர்ப்பிக்க தயாராகுங்கள்.

**விவாதிக்க:**

- அழிவுகள் கடவுளின் தண்டனை, அழிவுகள் மனித செயற்பாடுகளின் விளைவு என விவாதிக்க.

**தேர்ச்சி 3.0** : இறையாட்சியை பின்பற்றி நல்வாழ்வு வாழ்வர்.
**தேர்ச்சி மட்டம் 3.1** : பொறுப்புடன் இறையாட்சிக்காக உழைக்க முன்வருவர்.
**செயற்பாடு 3.1** : பொறுப்புடன் இறையாட்சிக்காக உழைக்க முன்வருவோம்.
**நேரம்** : 80 நிமிடங்கள்.
**தரவிருத்தி உள்ளீடுகள்** :

- இணைப்பு 3.1.1 இலுள்ள தகவல் கோவை.
- இணைப்பு 3.1.2 இலுள்ள குழுத்தேடியாய்வு அறிவுறுத்தல் பத்திரம்.
- திருவிவிலியம்
- எழுது கடதாசி, நிறப்பேனா

**கற்றல் கற்பித்தல் செயலொழுங்கு :**

**படி 3.1.1.**

- இணைப்பு 3.1.1 இலுள்ள தகவல் கோவையை ஓரிரு முறைகள் மாணவர்கள் நன்கு விளங்கும் வண்ணம் வாசியுங்கள்.
- 'இறையாட்சி' என்றால் என்ன என விளக்குங்கள்.
- 'இறையாட்சி' பற்றிய சிந்தனைகளை விளக்கும்படி மாணவர்களுக்கு இடமளியுங்கள்.
- 'பொறுப்புடன் இறையாட்சிக்காக உழைத்தல்' பற்றி கலந்துரையாடலில் திறந்த மனதுடன் ஈடுபட மாணவர்களுக்கு சந்தர்ப்பமளியுங்கள்.
- பின்வரும் விடயங்களை வலியுறுத்தும் கலந்துரையாடலில் ஈடுபட வழிகாட்டுங்கள்.

> - இறையாட்சி என்பது கடவுள் எம்மை ஆட்சி செய்கின்றார் என்பது.
> - அனைவரும் நிறைவுடன் வாழ இயேசு பலஸ்தீனாவில் முன்வைத்தது 'இறையாட்சி' என்பது.
> - இறையாட்சியை ஏற்று, பொறுப்புடன் செயற்படும்போது நல்வாழ்வு வாழலாம் என்பது.

10 நிமிடங்கள்

**படி 3.1.2** :

- மாணவர்களை சிறுகுழுக்களாக்குங்கள்.
- குழுத்தேடியாய்வு அறிவுறுத்தல் பத்திரப்பிரதிகளை மாணவர்களுக்கு வழங்குங்கள்.
- தேவையான எழுது கடதாசி, நிறப்பேனா என்பனவற்றை மாணவர்களுக்கு வழங்குங்கள்.
- குழுச்செயற்பாட்டை அவதானித்து உறுதி செய்யுங்கள்.
- அறிக்கைகள் சமர்ப்பிப்பதற்கு குழுக்களை ஆயத்தப்படுத்துங்கள்.

30 நிமிடங்கள்

**படி .3.1.3** :

- அறிக்கை சமர்ப்பிக்க குழுக்களை வழிப்படுத்துங்கள்
- வேறு பொருத்தமான கருத்துக்களை வெளிக்கொணர அதே குழுவினருக்கு சந்தர்ப்பமளியுங்கள்.
- ஆக்கபூர்வமான விமர்சனங்களை முன்வைக்க ஏனைய குழுக்களுக்கு இடமளியுங்கள்.
- குழுக்களின் சிந்தனைப்பகிர்வினை தொகுத்து, பின்வரும் கருத்துக்களை இணைத்து, ஆரோக்கியமான கலந்துரையாடலில் ஈடுபடுங்கள்.

- இயேசு முன் வைத்த முக்கியமான கருப்பொருள் 'இறையாட்சி' என்பது.
- தீமை தவறு என ஏற்று, மனம் மாறி, 'கடவுளுடைய ஆட்சியே மனுக்குலவாழ்வுக்கு பொருத்தமானது' என சிந்தித்து செயற்படுவது இயேசுவின் எதிர்பார்ப்பு என்பது.
- இயேசுவின் இறையாட்சி தீமைவிரும்பிகளால் வரவேற்கப்படவில்லை என்பது.
- இறையாட்சியை பின்பற்றி வாழும்போது, சவால்களுக்கு மத்தியிலும், மனுக்குல உயர்வுக்காக/வளர்ச்சிக்காக வாழலாம் என்பது.

40 நிமிடங்கள்

**கணிப்பீட்டு மதிப்பீட்டு நியதிகள்**

1. 'இறையாட்சி பற்றி இயேசு கூறிய கதை/சிந்தனை ஒன்றை விளக்குவர்.
2. இறையாட்சியை ஏற்று வாழ்வோர் செய்யும் செயற்பாடுகள் ஐந்தை எழுதுவர்.
3. 'இறையாட்சிக்காக வாழ்வோர் பேறுபெற்றோர்' எனும் தலைப்பில் கவிதை / நாடகம் / கதை / சித்திரம் முன்வைப்பர்.
4. இறையாட்சிக்காக வாழ்வோம் / வாழ்வேன் என தீர்மானித்து செயற்பாட்டுக்கான சிந்தனைகள சிலவற்றை விளக்குவர்.

## தகவல் கோவை

**இணைப்பு 3.1.1**

கடவுளின் விருப்பத்தின் படி நடைபெறும் ஆளுகை / ஆட்சி கடவுளின் ஆட்சி (இறையாட்சி) எனப்படும். இந்த ஆட்சி எல்லாருக்கும் நலமளிக்கும் பண்புகளால் (மதிப்பீடுகள் / விழுமியங்கள்) நிறைந்திருக்கும். இயேசு தனது வாழ்வு பணி மூலம் இதனையே முன்வைத்தார். இயேசுவின் போதனைகள் (உவமைகள் / சிந்தனைகள்) செயற்பாடுகள் (புதுமைகள், வாழ்க்கை முறை) அனைத்தும் இறையாட்சியையே வெளிப்படுத்தியது.

உரோமைய ஆதிக்கவாதத்தின் கீழ், பல்வேறுபட்ட ஒடுக்குமுறைகளின் மத்தியில் வாழ்ந்த இஸ்ரயேலர், இயேசு முன்வைத்த 'இறையாட்சியில்' அர்த்தம் கண்டனர். இதனாலேயே அவரை ஏற்று வாழ்ந்தனர், பின்பற்றினர். இயேசு இறையாட்சி மூலம் முன்வைத்த பல சிந்தனைகள் தீமைவிரும்பிகளுக்கு சிக்கலாக இருந்தது. இதனால்த்தான் இயேசுவை கொலை செய்தனர். ஆனால், கடவுள், 'இயேசுவின் உயிர்ப்பு' மூலம் 'இறையாட்சி' அழிக்க முடியாத ஒன்று என்பதை உறுதிப்படுத்தினார்.

சுயநலம் நிறைந்த ஒடுக்குமுறை ஆட்சிகள் மனுக்குலத்துக்கு பொருத்தமானதல்ல. அனைவரும் மதிப்புடன் வாழ சந்தர்ப்பம் வழங்கப்பட வேண்டும். அன்பு, நீதி, இரக்கம்... போன்ற பண்புகள் மைய ஆட்சி மூலம் மட்டுமே எல்லாரும் மாண்புடன் வாழ முடியும்.

இயேசு முன்வைத்த 'இறையாட்சி'யை ஏற்பது, தீமை தவறு என அதனை நிராகரிக்கும் போதே சாத்தியமாகும். இறையாட்சியை ஏற்று, அதன் விழுமியங்களை நடைமுறை வாழ்வில் பாவிக்க முன்வருவோரே இயேசுவின் இன்றைய சீடர்களாக கருதப்படக்கூடியவர்கள் ஆகும்.

## குழுத்தேடியாய்வு அறிவுறுத்தல் பத்திரம்

**இணைப்பு 3.1.2**

**குழுச்செயற்பாட்டுக்கான அறிவுறுத்தல்கள்**

- செயற்பாட்டுப்படிவம் குறித்து குழுக்கள் ஒவ்வொன்றும் அதிக கவனம் செலுத்துங்கள்.
- குழுவினருடன் நன்கு கலந்துரையாடி, திட்டமிட்டு செயற்பாடுகளில் ஈடுபடுங்கள். குழுவினரின் கருத்து வெளிப்பாடுகளை, அறிக்கையாக்கி, வகுப்பில் சமர்ப்பிக்க தயாராகுங்கள்

1. இறையாட்சியின் பண்புகள்/மதிப்பீடுகள் சிலவற்றை விளக்குங்கள்.
2. இறையாட்சி பற்றி இயேசு கூறிய ஒரு உவமை அடிப்படையில் சிந்தித்து, உங்கள் செயற்பாடுகளை முன்வையுங்கள்.
3. இறையாட்சியின் விழுமியங்களை, மனுக்குலத்தை அழிக்கும் தீமையின் ஆட்சியின் அடிப்படைகளுடன் ஒப்பிடுங்கள்.
4. இறையாட்சியின் விழுமியங்களின் அடிப்படைகளை விளக்கும் இன்றைய சம்பவம் ஒன்றை கூறுங்கள்.

**தேர்ச்சி 3.0** : இறையாட்சியை பின்பற்றி நல்வாழ்வு வாழ்வர்.

**தேர்ச்சி மட்டம் 3.2** : பேதுரு, பவுல் போன்றோரின் சீடத்துவத்தை பின்பற்றி இறையாட்சிக்காக செயற்படுவர்.

**செயற்பாடு 3.2** : பேதுரு, பவுல் போன்றோரின் சீடத்துவத்தை பின்பற்றி இறையாட்சிக்காக செயற்படுவோம்.

**நேரம்** : 80 நிமிடங்கள்.

**தரவிருத்தி உள்ளீடுகள்** :

- இணைப்பு 3.2.1 இலுள்ள தகவல் கோவை.
- இணைப்பு 3.2.2 இலுள்ள குழுத்தேடியாய்வு அறிவுறுத்தல் பத்திரம்.
- திருவிவிலியம்
- எழுது கடதாசி, நிறப்பேனா

**கற்றல் கற்பித்தல் செயலொழுங்கு** :

**படி 3.2.1.**

- இணைப்பு 3.2.1 இலுள்ள தகவல் கோவையை ஓரிரு முறைகள் மாணவர்கள் நன்கு விளங்கும் வண்ணம் வாசியுங்கள்.
- 'இறையாட்சியும் பேதுரு-பவுலின் சீடத்துவமும்' பற்றி விளக்குங்கள்.
- 'பேதுரு-பவுலின் இறையாட்சியின் விழுமியங்கள்' தொடர்பான கதைகள்/கருத்துக்கள் என்பவற்றை விளக்கும்படி மாணவர்களுக்கு இடமளியுங்கள்.
- பேதுரு-பவுல் ஆகியோரின் சீடத்துவமும் இறையாட்சியும்' தொடர்பான ஒரு கலந்துரையாடலில் திறந்த மனதுடன் ஈடுபட மாணவர்களுக்கு சந்தர்ப்பமளியுங்கள்.
- பின்வரும் விடயங்களை வலியுறுத்தும் கலந்துரையாடலில் ஈடுபட வழிகாட்டுங்கள்.

> - பேதுரு பவுல் போன்றோர், இயேசுவின் இறையாட்சியை பின்பற்றிய சீடர்கள் என்பது.
> - பேதுரு பவுல் போன்றோர், இறையாட்சிக்காக பணியாற்றிய போது பல சவால்களை எதிர்கொண்டனர் என்பது.
> - இறையாட்சிக்கான இவர்களின் பணியில், தீமை விரும்பிகளால் இவர்கள் கொல்லப்பட்டனர் என்பது.

10 நிமிடங்கள்

**படி 3.2.2** :

- மாணவர்களை சிறுகுழுக்களாக்குங்கள்.
- குழுத்தேடியாய்வு அறிவுறுத்தல் பத்திர பிரதிகளை மாணவர்களுக்கு வழங்குங்கள்.
- தேவையான எழுது கடதாசி, நிறப்பேனா என்பனவற்றை மாணவர்களுக்கு வழங்குங்கள்.
- குழுச்செயற்பாட்டை அவதானித்து உறுதி செய்யுங்கள்.
- அறிக்கைகள் சமர்ப்பிப்பதற்கு குழுக்களை ஆயத்தப்படுத்துங்கள்.

30 நிமிடங்கள்

படி 3.2.3

- அறிக்கை சமர்ப்பிக்க குழுக்களை வழிப்படுத்துங்கள்
- வேறு பொருத்தமான கருத்துக்களை வெளிக்கொணர அதே குழுவினருக்கு சந்தர்ப்பமளியுங்கள்.
- ஆக்கபூர்வமான விமர்சனங்களை முன்வைக்க ஏனைய குழுக்களுக்கு இடமளியுங்கள்.
- குழுக்களின் சிந்தனைப்பகிர்வினை தொகுத்து, பின்வரும் கருத்துக்களை இணைத்து, ஆரோக்கியமான கலந்துரையாடலில் ஈடுபடுங்கள்.

- கடவுளுடைய ஆட்சிக்காக செயற்படுவது சீடத்துவத்தின் அடிப்படை என்பது.
- பேதுரு பவுல் போன்றோர் பல சவால்களுக்கு மத்தியிலும் இறையாட்சிக்காக உழைத்தனர் என்பது.
- இறையாட்சிக்காக உழைத்த பேதுரு-பவுல் போன்றோர் வாழ்வில், இறையாட்சிக்கான விழுமியங்களை பயன்படுத்துவதில் பல பிரச்சினைகள் காணப்பட்டன என்பது.

  பேதுரு: மாற்கு 1:16-20, 3:13-19, 14:66-72, மத்தேயு 16:13-20, திருத்தூதர்கள் பணிகள்: 8:14-25, 10, கலாத்தியர் 1:11-24,3:21-29, யோவான்21:15-17.

  பவுல்: திருத்தூதர்கள் பணிகள்: 13-28, உரோமையர் 13:1-5, கொலோசையர் 3:18-25.
- கடவுளுடைய ஆட்சிக்காக குறைவுகளின் மத்தியிலும் நாம், பேதுரு-பவுலைப் போல நிறைவை நோக்கி, இறையருளுடன் செயற்பட வேண்டும் என்பது.

40 நிமிடங்கள்

**கணிப்பீட்டு மதிப்பீட்டு நியதிகள்**

1. 'இறையாட்சிக்காக பணியாற்றுதலே சீடத்துவத்தின் அடிப்படை' என விளக்குவர்.
2. பேதுரு பவுல் போன்றோர் இறையாட்சிக்காக உழைத்த போது எதிர்கொண்ட சிக்கல்களை சிந்தித்து எழுதுவர்.
3. பேதுரு பவுல் போன்றோரின் வாழ்விலிருந்து, இறையாட்சிக்காக பணி புரியும் போது நாம் நடைமுறைப்படுத்தவேண்டிய விழுமியங்களையும், விலக்கிவிட வேண்டிய தீய பண்புகளையும் அட்டவணைப்படுத்துவர்.
4. இறையாட்சிக்கான சீடத்துவத்தை ஏற்போம் / ஏற்பேன் என தீர்மானித்து செயற்பாட்டுக்கான சிந்தனைகள சிலவற்றை விளக்குவர்.

**தகவல் கோவை**

**இணைப்பு 3.2.1**

இறையாட்சிக்காக செயற்படுவதே சீடத்துவத்தின் முக்கியமான பொறுப்பு என்பதற்கு பேதுரு, பவுல் ... போன்றோரின் வாழ்வு நல்ல உதாரணமாகும். இறையாட்சிக்கான போராட்டத்தை மேற்கொண்ட இவர்கள், இறுதியில் தீயோரால் கொல்லப்பட்டனர்.

இறையாட்சிக்கான சீடத்துவ வாழ்வில், பேதுரு, பவுல்... போன்றோர் பல்வேறுபட்ட சிக்கல்களை எதிர்கொண்டனர். இறையாட்சியின் மனப்பாங்குகளுக்கும் தீய மனப்பாங்குகளுக்கும் இடையேயான

இழுபறிநிலை தொடர்ந்துள்ளது. பேதுரு, இறையாட்சிக்காக உழைக்க அனைத்தையும் விட்டுவிட்டு வந்தார் (மாற்கு 1:16-20). இயேசுவுடன் தங்கி, அவரது விருப்பப்படி பணியாற்றினார் (மாற்கு 3:13-19). இயேசுவை, 'மெசியா, வாழும் கடவுளின் மகன்'(மத்தேயு 16:13-20)' என அறிக்கை செய்தார். 'இயேசு-சமுகத்தை' பேணி நடத்தும்படி, இயேசுவால் கேட்கப்பட்டார் (யோவான் 21:15-19). இவை பேதுரு இறையாட்சியின் விழுமியங்களுடன் வாழ்ந்தார் என்பதை உறுதிப்படுத்துகின்றன. எனினும் இவரிடம் காணப்பட்ட தீய மனப்பாங்குகளால் ஏற்பட்ட சிக்கல்களையும் புதிய ஏற்பாடு கூறுகின்றது. இறையாட்சிக்காக சாவைக்கூட ஏற்க தயாராக இருந்த இயேசுவை, பேதுரு தடுத்தார். இதனால் இயேசு 'சாத்தானே' என கண்டித்தார் (மத்தேயு 18:21-26). இயேசுவை தெரியாது என மறுதலித்து, சுயநலத்துடன் தன்னை பாதுகாத்துக்கொண்டார் (மாற்கு 14:66-72). பின்னர் அது தவறு என அறிக்கையிட்டு மனம் மாறினார். பணத்துக்காக இறை விழுமியங்களை விற்கக்கூடாது (திருத்தூதர்கள் பணிகள் 8:14-25) என்பதில் தெளிவாக இருந்தார். யூத இனவாதத்துடன் பேதுரு செயற்பட்டார் (கலாத்தியர் 1:11-24, 3:21-29) எனினும் கடவுளுக்குள் யூதர்-பிறஇனத்தவர் வேறுபாடு இல்லை எனவும் கூறினார் (திருத்தூதர்கள் பணிகள் 10).

பவுலும் இறையாட்சிக்காக நன்கு செயற்பட்ட இன்னொரு சீடர் (திருத்தூதர்கள் பணிகள் 13-28). புதிய ஏற்பாட்டில் அவருடைய பல கடிதங்களை காணலாம். எனினும் ஆணாதிக்கம்... போன்ற தீய சிந்தனைகளும் அவருக்குள் காணப்பட்டன (கொலோசியர் 3:18-25). பவுல் அடிமைத்தனத்துக்கான எதிர்ப்பை (பிலமோன் 1) முன்வைக்கவில்லை என்பதும் குறிப்பிடத்தக்கது.

இங்கு பேதுரு பவுல்... போன்ற சீடர்கள் தவறு செய்தவர்கள் என்பதை சுட்டிக்காட்டுவதல்ல முக்கிய நோக்கம். குறிப்பாக இச்சீடர்கள், பல பிரச்சினைகள் மத்தியிலும், திரும்பவும், திரும்பவும் மனம் மாறி, இயேசு-சமுக வளர்ச்சிக்காக தம்முயிரையும் கூட இழக்கத்தயாராக இருந்தனர் என்பது குறிப்பிடத்தக்கது.

எனவே சீடத்துவ வாழ்வில், நாம் தவறுகள் இழைத்து, கடவுளின் விருப்பத்துக்கு மாறாக நடந்தாலும், பேதுரு போல உடனடியாக மனம் மாறி இறையாட்சிக்காக உழைக்க வேண்டும்.

## குழுத்தேடியாய்வு அறிவுறுத்தல் பத்திரம்.

**இணைப்பு 3.2.2**

**குழுச்செயற்பாட்டுக்கான அறிவுறுத்தல்கள்**

- செயற்பாட்டுப்படிவம் குறித்து குழுக்கள் ஒவ்வொன்றும் அதிக கவனம் செலுத்துங்கள்.
- குழுவினருடன் நன்கு கலந்துரையாடி, திட்டமிட்டு செயற்பாடுகளில் ஈடுபடுங்கள்.
- குழுவினரின் கருத்து வெளிப்பாடுகளை, அறிக்கையாக்கி, வகுப்பில் சமர்ப்பிக்க தயாராகுங்கள்.

- விவாதிக்க.

இறையாட்சியின் விழுமியங்களுக்கும் தீய மனப்பாங்குகளுக்கும் இடையேயான இழுபறி-போராட்டத்தில் பேதுருவும் பவுலும் ஈடுபட்டனர் / ஈடுபடவில்லை.

**தேர்ச்சி 3.0** : இறையாட்சியை பின்பற்றி நல்வாழ்வு வாழ்வர்.

**தேர்ச்சி மட்டம் 3.3** : விசுவாசப்புரட்சியாளர்கள் மரியா, மகதலா மரியா போல இறையாட்சிக்கு மாறுத்தரம் வழங்குவர்.

**செயற்பாடு 3.3** : விசுவாசப்புரட்சியாளர்கள் மரியா, மகதலா மரியா போல இறையாட்சிக்கு மாறுத்தரம் வழங்குவோம்..

**நேரம்** : 80 நிமிடங்கள்.

**தரவிருத்தி உள்ளீடுகள்** :

- இணைப்பு 3.3.1 இலுள்ள தகவல் கோவை.
- இணைப்பு 3.3.2 இலுள்ள குழுத்தேடியாய்வு அறிவுறுத்தல் பத்திரம்.
- திருவிவிலியம்
- எழுது கடதாசி, நிறப்பேனா

**கற்றல் கற்பித்தல் செயலொழுங்கு** :

**படி 3.3.1.**

- இணைப்பு 3.3.1 இலுள்ள தகவல் கோவையை ஓரிரு முறைகள். மாணவர்கள் நன்கு விளங்கும் வண்ணம் வாசியுங்கள்.
- மரியா, மகதலா மரியா பற்றி விளக்குங்கள்.
- இறையாட்சியின் விழுமியங்களுடன் பொருத்தமான முறையில் விசுவாசப்புரட்சியாளர்களாக வாழ்வோரின் கதைகள் / கருத்துக்கள் என்பவற்றை விளக்கும்படி மாணவர்களுக்கு இடமளியுங்கள்.
- 'இறையாட்சியின் விழுமியங்களுடன் ஏற்றமுறையில் விசுவாசத்துடன் செயற்பட்ட மரியா, மகதலா மரியா' பற்றிய கலந்துரையாடலில் திறந்த மனதுடன் ஈடுபட மாணவர்களுக்கு சந்தர்ப்பமளியுங்கள்.
- பின்வரும் விடயங்களை வலியுறுத்தும் கலந்துரையாடலில் ஈடுபட வழிகாட்டுங்கள்.

> - மரியா, மகதலா மரியா போன்றோர், இயேசுவின் விருப்பப்படி வாழ்ந்தோர் என்பது.
> - இறையாட்சிக்கு ஏற்ப வாழ இவர்கள் தம்மை ஒப்புவித்தனர் என்பது.
> - நாமும் பிரச்சினைகளுக்கு மத்தியிலும் எம்மை இறையாட்சியின் பணிக்கு ஒப்புவிக்க வேண்டும் என்பது.

10 நிமிடங்கள்

**படி 3.3.2** :

- மாணவர்களை சிறுகுழுக்களாக்குங்கள்.
- குழுத்தேடியாய்வு அறிவுறுத்தல் பத்திர பிரதிகளை மாணவர்களுக்கு வழங்குங்கள்.
- தேவையான எழுது கடதாசி, நிறப்பேனா என்பனவற்றை மாணவர்களுக்கு வழங்குங்கள்.
- குழுச்செயற்பாட்டை அவதானித்து உறுதி செய்யுங்கள்.
- அறிக்கைகள் சமர்ப்பிப்பதற்கு குழுக்களை ஆயத்தப்படுத்துங்கள்.

30 நிமிடங்கள்

படி 3.3.3

- அறிக்கை சமர்ப்பிக்க குழுக்களை வழிப்படுத்துங்கள்
- வேறு பொருத்தமான கருத்துக்களை வெளிக்கொணர அதே குழுவினருக்கு சந்தர்ப்பமளியுங்கள்.
- ஆக்கபூர்வமான விமர்சனங்களை முன்வைக்க ஏனைய குழுக்களுக்கு இடமளியுங்கள்.
- குழுக்களின் சிந்தனைப்பகிர்வினை தொகுத்து, பின்வரும் கருத்துக்களை இணைத்து, ஆரோக்கியமான கலந்துரையாடலில் ஈடுபடுங்கள்.

- மரியா, மகதலா மரியா போன்றோர், அன்றைய பலஸ்தீன சூழ்நிலையில் இறையாட்சிக்காக விசுவாசத்துடன் வாழ்ந்தவர்கள் என்பது.
- 'தீமையற்ற சமுகம் வேண்டும்' எனும் எதிர்பார்ப்பு கொண்டவர் மரியா (லூக்கா 1:45-55) என்பது.
- உயிர்த்த இயேசுவை உலகுக்கு அறிவித்தவர் மகதலா மரியா (யோவான் 20:1-18) என்பது.
- எமது சூழ்நிலையிலும் இறையாட்சியின் விழுமியங்களின் அடிப்படையில் எமது எதிர்பார்ப்பு, செயற்பாடுகள் என்பன அமைய வேண்டும் என்பது.

40 நிமிடங்கள்

**கணிப்பீட்டு மதிப்பீட்டு நியதிகள்**

1. "இறையாட்சிக்கான விசுவாசப் புரட்சிகளில் ஈடுபட்டவர்கள்" பற்றி விளக்குவர்.
   (உதாரணம்: கானானியப்பெண் மாற்கு 7:24-30; இரத்தப்போக்குடைய பெண் மாற்கு 5:21-43)
2. மரியா, மகதலா மரியா என்போரிடம் காணப்பட்ட இறையாட்சியின் விழுமியங்களை முன்வைப்பர்.
3. மரியா, மகதலா மரியா பலஸ்தீனாவில் எதிர்கொண்ட சிக்கலான அனுபவங்களை சிந்தித்து எழுதுவர்.
4. மரியா, மகதலா மரியா போன்று வாழவேண்டும் என தீர்மானித்து சில திட்டங்களை முன்வைப்பர்.

## தகவல் கோவை

**இணைப்பு 3.3.1**

யூத சமுதாயம் பல ஆண்டுகளாக உரோமைய ஆதிக்கத்துக்குள் இருந்தது. அதற்கு முன் கிரேக்க ஆதிக்கத்துக்குள் இருந்தது என்பதும் குறிப்பிடத்தக்கது. இச்சூழ்நிலையில் மெசியா வந்து நல்வாழ்வு தருவார் எனும் எதிர்பார்ப்பு யூதர்களிடம் ஆழமாக வேரூன்றியிருந்தது. ஒடுக்குமுறை மத்தியில் நல்ல சமுதாயம் வேண்டும் எனும் எதிர்பார்ப்பு மரியாவிடம் காணப்பட்டது (லூக்கா 1:46-55). இயேசு இறையாட்சிக்குரிய செயற்பாடுகளில் ஈடுபட்ட போது மரியாவும் அவற்றில் ஈடுபட்டார், அவைகளை விளங்கிக்கொண்டார். இறுதியில் இயேசு கொலை செய்யப்பட்ட போது, சிலுவையடியில் விசுவாசப்புரட்சிவாதியாக, தப்பியோடாது நின்றார் (யோவான் 19:25-27). இயேசுவின் விருப்பப்படி யோவானை மகனாக ஏற்றுக்கொண்ட மரியா, தொடக்ககால திருச்சபையில் பணியாற்றினார் (எருசலேம் - திருத்தூதர்பணிகள் 1:12-14).

மகதலா மரியா, இயேசுவின் இறையாட்சி நடவடிக்கைகளால் கவரப்பட்டு, அதற்காக வாழ முன்வந்தவர்களில் ஒருவர். பெண்கள் அன்று, யூதசமுகத்தில் உரிய முறையில் மதிக்கப்படவில்லை. இவர்களின் சாட்சியத்தை வழக்குகள் தீர்ப்புகளில் கூட பலர் ஒரு பொருட்டாக மதிப்பதில்லை. சமுதாய ஒடுக்குமுறைகளை கடந்து செயற்படுவோர் பல்வேறுபட்ட பிரச்சினைகளையும் சந்திப்பது தவிர்க்க முடியாததாக இருந்தது. இச்சூழ்நிலையில்தான் இயேசுவின் உயிர்ப்புக்கு சாட்சியாக மகதலா மரியா விசுவாசப்புரட்சிவாதியாக செயற்பட்டார் (யோவான் 20:1-18).

மரியா, மகதலா மரியா போன்றோர் யூதசமுதாய பெண்கள் என்பதாலும் இயேசுவின் இறையாட்சியை பின்பற்றியோர் என்பதாலும் பல்வேறுபட்ட பிரச்சினைகளை எதிர்கொண்டனர். எனினும் விசுவாசத்துடன் கடவுளுடைய ஆட்சியின் இருப்பை உறுதிப்படுத்தும் புரட்சியாளர்களாக தொடர்ந்தேட்சையாக செயற்பட்டனர்.

நாமும் இன்றைய சூழ்நிலையில் சவால்களுக்கு மத்தியில் உறுதியுடனும், இறையருளுடனும் விசுவாசப்புரட்சியாளர்களாக இறையாட்சிக்காக உழைக்க வேண்டும்.

## குழுத்தேடியாய்வு அறிவுறுத்தல் பத்திரம்.

**இணைப்பு 3.3.2**

**குழுச்செயற்பாட்டுக்கான அறிவுறுத்தல்கள்**

- செயற்பாட்டுப்படிவம் குறித்து குழுக்கள் ஒவ்வொன்றும் அதிக கவனம் செலுத்துங்கள்.
- குழுவினருடன் நன்கு கலந்துரையாடி, திட்டமிட்டு செயற்பாடுகளில் ஈடுபடுங்கள்.
- குழுவினரின் கருத்து வெளிப்பாடுகளை, அறிக்கையாக்கி, வகுப்பில் சமர்ப்பிக்க தயாராகுங்கள்.

1. உமது சூழ்நிலையில் வாழும், மரியா, மகதலா மரியா போன்ற விசுவாசப்புரட்சியாளர்களின் கதைகளை பகிர்ந்து கொள்ளுங்கள்
2. 'விசுவாசப்புரட்சி என்பது இறையாட்சியின் மதிப்பீடுகளின்படி வாழ்வது' என விளக்குங்கள்.
3. இறையாட்சிக்காக உழைக்கும் சில குழுக்கள், அமைப்புகள் பற்றிக்கூறி, அவர்களின் பணிகளை முன்வையுங்கள்.
4. இறையாட்சிப்பணியில் உறுதியுடன் பணியாற்ற முடிவெடுத்தவர்களாக, நடைமுறை செயற்பாடுகளுக்கான திட்டங்கள் இரண்டினை முன்வையுங்கள்.

| | | |
|---|---|---|
| **தேர்ச்சி 3.0** | : | இறையாட்சியை பின்பற்றி நல்வாழ்வு வாழ்வர். |
| **தேர்ச்சி மட்டம் 3.4** | : | பொறுப்புடன் இறையாட்சியை, திருமுழுக்கு யோவான் போல பின்பற்றி வாழ்வர். |
| **செயற்பாடு 3.4** | : | பொறுப்புடன் இறையாட்சியை, திருமுழுக்கு யோவான் போல பின்பற்றி வாழ்வர். |
| **நேரம்** | : | 80 நிமிடங்கள். |
| **தரவிருத்தி உள்ளீடுகள்** | : | |

- இணைப்பு 3.4.1 இலுள்ள தகவல் கோவை.
- இணைப்பு 3.4.2 இலுள்ள குழுத்தேடியாய்வு அறிவுறுத்தல் பத்திரம்.
- திருவிவிலியம்
- எழுது கடதாசி, நிறப்பேனா

**கற்றல் கற்பித்தல் செயலொழுங்கு :**

**படி 3.4.1.**

- இணைப்பு 3.4.1 இலுள்ள தகவல் கோவையை ஓரிரு முறைகள் மாணவர்கள் நன்கு விளங்கும் வண்ணம் வாசியுங்கள்.
- திருமுழுக்கு யோவான் பற்றி விளக்குங்கள்.
- 'இறையாட்சியை பின்பற்றி வாழ்ந்த திருமுழுக்கு யோவான்' பற்றிய கதைகள் / கருத்துக்கள் என்பவற்றை விளக்கும்படி மாணவர்களுக்கு இடமளியுங்கள்.
- 'இறையாட்சியை பின்பற்றுதல்' பற்றிய கலந்துரையாடலில் திறந்த மனதுடன் ஈடுபட மாணவர்களுக்கு சந்தர்ப்பமளியுங்கள்.
- பின்வரும் விடயங்களை வலியுறுத்தும் கலந்துரையாடலில் ஈடுபட வழிகாட்டுங்கள்.

> - இறையாட்சியை பின்பற்றி வாழும் வாழ்க்கை எல்லாருக்கும் நன்மையானது என்பது.
> - திருமுழுக்கு யோவான், இறையாட்சியை நம்பி வாழ, மனம் மாறும்படி, அனைவரையும் அழைத்தவர் என்பது.
> - திருமுழுக்கு யோவான், இறையாட்சியை பின்பற்றி வாழ்ந்தார் என்பதற்கு அவரது சிந்தனைகள், செயற்பாடுகள் என்பன சான்றாகும் என்பது.
> - நாமும் (மனுக்குலம்) இறையாட்சியை பின்பற்ற வேண்டும் என்பது.

10 நிமிடங்கள்

**படி 3.4.2 :**

- மாணவர்களை சிறுகுழுக்களாக்குங்கள்.
- குழுத்தேடியாய்வு அறிவுறுத்தல் பத்திர பிரதிகளை மாணவர்களுக்கு வழங்குங்கள்.
- தேவையான எழுது கடதாசி, நிறப்பேனா என்பனவற்றை மாணவர்களுக்கு வழங்குங்கள்.
- குழுச்செயற்பாட்டை அவதானித்து உறுதி செய்யுங்கள்.
- அறிக்கைகள் சமர்ப்பிப்பதற்கு குழுக்களை ஆயத்தப்படுத்துங்கள்.

30 நிமிடங்கள்

படி 3.3.3 :

- அறிக்கை சமர்ப்பிக்க குழுக்களை வழிப்படுத்துங்கள்
- வேறு பொருத்தமான கருத்துக்களை வெளிக்கொணர அதே குழுவினருக்கு சந்தர்ப்பமளியுங்கள்.
- ஆக்கபூர்வமான விமர்சனங்களை முன்வைக்க ஏனைய குழுக்களுக்கு இடமளியுங்கள்.
- குழுக்களின் சிந்தனைப்பகிர்வினை தொகுத்து, பின்வரும் கருத்துக்களை இணைத்து, ஆரோக்கியமான கலந்துரையாடலில் ஈடுபடுங்கள்.

- இறையாட்சியை பின்பற்றி, அதனை பறைசாற்றியவர் திருமுழுக்கு யோவான் என்பது.
- இறையாட்சியை ஏற்க மனம் மாறும்படி அனைவரையும் திருமுழுக்கு யோவான் அழைத்தார் (மத்தேயு 3:1-12) என்பது.
- இறையாட்சியின் பண்புகளை வெளிக்காட்டும் எளிமையான வாழ்வு வாழ்ந்தவர் திருமுழுக்கு யோவான் (மாற்கு 1:1-8) என்பது.
- திருமுழுக்கு யோவானின் வாழ்வு, பணி என்பன இறையாட்சியின் தன்மைகளை வெளிப்படுத்தின என்பதற்கு இயேசு சான்று (மத்தேயு 11:1-19) என்பது.
- இறையாட்சியின் அறவியலை முன்வைத்ததால், திருமுழுக்கு யோவான் தீயோரால் கொலைசெய்யப்பட்டார் (மத்தேயு 14:1-12) என்பது.
- எமது சூழ்நிலையிலும், நாமும் திருமுழுக்கு யோவானைப்போல இறையாட்சிக்காக, (இயேசு மீண்டும் வரும் வரை) செயற்படவேண்டும் என்பது.

40 நிமிடங்கள்

**கணிப்பீட்டு மதிப்பீட்டு நியதிகள்**

1. 'இறையாட்சியை பின்பற்றி வாழ்ந்த திருமுழுக்கு யோவான் கிறிஸ்தவர்களுக்கு ஒரு முன்னோடி' என விளக்குவர்.
2. தீய சிந்தனைகளையும் செயற்பாடுகளையும் திருமுழுக்கு யோவான் எப்படி நோக்கினார் என சிந்தித்து வெளிப்படுத்துவர்.
3. திருமுழுக்கு யோவானின் வழியில் இறையாட்சியை பின்பற்ற செய்ய வேண்டிய நடவடிக்கைகள் ஐந்தை எழுதுவர்
4. திருமுழுக்கு யோவான் போல வாழவேண்டும் என தீர்மானித்து, செயற்பாடுகள் சிலவற்றை முன்வைப்பர்.

## தகவல் கோவை

**இணைப்பு 3.4.**

இறையாட்சியை பின்பற்றி, அதனை பறைசாற்றியவரகளில் மிகவும் முக்கியமான ஒருவர் திருமுழுக்கு யோவான். கிறிஸ்தவர்கள் நாளாந்த வாழ்வில் பின்பற்ற வேண்டிய முதன்மையான பொருத்தமான இறைவாக்கினரும் இவரே (மத்தேயு 11:11-19).

இறையாட்சியை திருமுழுக்கு யோவான் பின்பற்றினார் என்பதற்கு அவரது வாழ்வே சான்றாகும். அவர் மிக எளிமையான வாழ்வு வாழ்ந்தார் (மாற்கு 1:1-8). தீமைகளையும் போலித்தனங்களையும் சகித்துக்கொண்டிருக்கவில்லை. நேரடியாகவே தவறுகளை கண்டித்து, களையச்செய்து, இறையாட்சியை ஏற்கும்படி அனைவரையும் அழைத்தார் (மத்தேயு 3:1-12). இயேசுவும் திருமுழுக்கு யோவானுடைய

வாழ்வை பாராட்டி, அவரை மனுக்குலம் பின்பற்ற வேண்டிய உதாரணமாக கருதினார்(மத்தேயு 11:2-19).

சாதாரன மக்களுடைய தவறுகளை மட்டுமல்ல, அரசனுடைய தவறுகளையும் சுட்டிக்காட்ட திருமுழுக்கு யோவான் தயங்கவில்லை. ஏரோது அரசன், ஏரோதியா (ஏரோதியா - ஏரோதுவின் சகோதரன் பிலிப்புவின் மனைவி) உறவை, இறையாட்சி மைய அறவியலுக்கு எதிரானதாக நோக்கி கண்டித்தார். இதனால் அந்த ஒடுக்குமுறை அரச குடும்பத்தால் சிறையிலிடப்பட்டு, பின்னர் தலை வெட்டப்பட்டு கொலை செய்யப்பட்டார் (மத்தேயு 14:1-12).

திருமுழுக்கு யோவான் போல இறையாட்சியை பின்பற்றி, இறையாட்சியின் விழுமியங்களை சாதாரன வாழ்வுக்குரியதாக்கி வாழ்பவர்களே கடவுளுடைய ஆட்சியை பின்பற்றுகிறவர்களாகும்.

**குழுத்தேடியாய்வு அறிவுறுத்தல் பத்திரம்.**

**இணைப்பு 3.4.2**

**குழுச்செயற்பாட்டுக்கான அறிவுறுத்தல்கள்**

- செயற்பாட்டுப்படிவம் குறித்து குழுக்கள் ஒவ்வொன்றும் அதிக கவனம் செலுத்துங்கள்.
- குழுவினருடன் நன்கு கலந்துரையாடி, திட்டமிட்டு செயற்பாடுகளில் ஈடுபடுங்கள்.
- குழுவினரின் கருத்து வெளிப்பாடுகளை, அறிக்கையாக்கி, வகுப்பில் சமர்ப்பிக்க தயாராகுங்கள்.

- கதை பகிர்வு:
  திருமுழுக்கு யோவான் இன்று எமது நாட்டுக்கு வந்தால் என்ன செய்திருப்பார் என்பதை கதைகள் மூலம் முன்வையுங்கள்.
  இக்கதைகள் மூலம் முன்வைக்கப்படும் இறையாட்சியின் விழுமியங்களை தெளிவுபடுத்துங்கள்.

**தேர்ச்சி 3.0** : இறையாட்சியை பின்பற்றி நல்வாழ்வு வாழ்வர்.

**தேர்ச்சி மட்டம் 3.5** : இன்றைய இறைவாக்கினராக வாழ்ந்து இறையாட்சிக்காக உழைப்பர்.

**செயற்பாடு 3.5** : இன்றைய இறைவாக்கினராக வாழ்ந்து இறையாட்சிக்காக உழைப்போம்.

**நேரம்** : 160 நிமிடங்கள்.

**தரவிருத்தி உள்ளீடுகள்** :

- இணைப்பு 3.5.1 இலுள்ள தகவல் கோவை.
- இணைப்பு 3.5.2 இலுள்ள குழுத்தேடியாய்வு அறிவுறுத்தல் பத்திரம்.
- திருவிவிலியம்
- எழுது கடதாசி, நிறப்பேனா

**கற்றல் கற்பித்தல் செயலொழுங்கு** :

**படி 3.5.1.**

- இணைப்பு 3.5.1 இலுள்ள தகவல் கோவையை ஓரிரு முறைகள் மாணவர்கள் நன்கு விளங்கும் வண்ணம் வாசியுங்கள்.
- ‘ இன்றைய இறைவாக்கினர்’ பற்றி விளக்குங்கள்.
- பேராயர் ஒஸ்கார் ரொமேரோ, பேராயர் ஹெல்டர் கமரா, அருட்பணி மைக்கல் ரொட்ரிக்கோ, செல்வி மியூரியல் ஹட்சின்ஸ், பேராயர் இலக்ஷ்மன் விக்கிரமசிங்க... போன்றோரின் வாழ்வில் இடம்பெற்ற, இறையாட்சியின் விழுமியங்களை வெளிப்படுத்தும் சம்பவங்களை / கருத்துக்களை விளக்கும்படி மாணவர்களுக்கு இடமளியுங்கள்.
- இன்றைய இறைவாக்கினர்களும் - இறையாட்சியும் எனும் கருப்பொருளில், ஒரு கலந்துரையாடலில் திறந்த மனதுடன் ஈடுபட மாணவர்களுக்கு சந்தர்ப்பமளியுங்கள்.
- பின்வரும் விடயங்களை வலியுறுத்தும் கலந்துரையாடலில் ஈடுபட வழிகாட்டுங்கள்.

> - இன்றைய நாட்களில் (சமகாலத்தில்) இறையாட்சியின் விழுமியங்களின் படி, இறைவிருப்பத்தை ஏற்று பின்பற்றி வாழ்பவர்களே இன்றைய இறைவாக்கினர்கள் என கருதப்படவேண்டும் என்பது.
> - இறைஆட்சியை பறைசாற்றி வாழும் இயேசு- சமுகத்தை இன்றைய இறைவாக்கினர்கள் என குறிப்பிடலாம் என்பது.
> - நாம் இன்றைய இறைவாக்கினர்களின் சிந்தனை செயற்பாடுகளை இறையாட்சியின் விழுமியங்களுடன் ஒப்பிட்டுப்பார்க்க வேண்டும் என்பது.

20 நிமிடங்கள்

**படி 3.5.2** :

- மாணவர்களை சிறு குழுக்களாக்குங்கள்.
- குழுத்தேடியாய்வு அறிவுறுத்தல் பத்திரபிரதிகளை மாணவர்களுக்கு வழங்குங்கள்.
- தேவையான எழுது கடதாசி, நிறப்பேனா என்பனவற்றை மாணவர்களுக்கு வழங்குங்கள்.
- குழுச்செயற்பாட்டை அவதானித்து உறுதி செய்யுங்கள்.
- அறிக்கைகள் சமர்ப்பிப்பதற்கு குழுக்களை ஆயத்தப்படுத்துங்கள்.

60 நிமிடங்கள்

படி 3.5.3 :

- அறிக்கை சமர்ப்பிக்க குழுக்களை வழிப்படுத்துங்கள்
- வேறு பொருத்தமான கருத்துக்களை வெளிக்கொணர அதே குழுவினருக்கு சந்தர்ப்பமளியுங்கள்.
- ஆக்கபூர்வமான விமர்சனங்களை முன்வைக்க ஏனைய குழுக்களுக்கு இடமளியுங்கள்.
- குழுக்களின் சிந்தனைப்பகிர்வினை தொகுத்து, பின்வரும் கருத்துக்களை இணைத்து, ஆரோக்கியமான கலந்துரையாடலில் ஈடுபடுங்கள்.

- கடவுளின் ஆளுகையின் விழுமியங்களை இன்றைய சூழ்நிலையில் தம் வாழ்வினூடாக வெளிப்படுத்துகின்றவர்களே இன்றைய இறைவாக்கினர்கள் என்பது.
- வரலாற்றில் நெருக்கடியான சூழ்நிலைகளில் பலர் இறையாட்சி விழுமியங்களை தம்பணி, வாழ்வு மூலம் வெளிப்படுத்தியுள்ளனர் என்பது.
  இலத்தீன் அமெரிக்கா-பேராயர் ஒஸ்கார் ரொமேரோ,
  பேராயர் ஹெல்டர் கமரா
  இலங்கை:
  புத்தளை - அருட்பணி மைக்கல் ரொட்ரிக்கோ
  கிளிநொச்சி- செல்வி மியூரியல் ஹட்சின்ஸ்
  குருநாகல் மறைமாவட்டம் - பேராயர்
  இலக்ஷ்மன் விக்கிரமசிங்க
- இறையாட்சியின் விழுமியங்களை அடிப்படையாகக் கொண்ட வாழ்வை நெருக்கடியான சூழ்நிலைகளில் முன்வைத்ததன் மூலம் எரேமியாவின்பணியை (எரேமியா 1:3-10), இன்றைய இறைவாக்கினர்கள் தொடர்ந்துள்ளனர் என்பது.
- நாம் வாழும் நெருக்கடிகள் நிறைந்த சூழ்நிலைகளில் கடவுளின் விருப்பத்தை நிறைவேற்றும் இன்றைய இறைவாக்கினர்களாக வாழ்வது எம் கடமை என்பது.

40 நிமிடங்கள்

**கணிப்பீட்டு மதிப்பீட்டு நியதிகள்**

1. 'இன்றைய இறைவாக்கினர்கள்' பற்றி விளக்குவர்.
2. இன்றைய இறைவாக்கினர்கள் எப்படி வாழவேண்டும் என்பது பற்றி சிந்தித்து வெளிப்படுத்துவர்.
3. இறையாட்சியின் விழுமியங்களுடன் இன்று வாழும் இறைவாக்கினர்கள் சிலரின் பணிகளை எழுதுவர்.
4. இன்றைய இறைவாக்கினராக செயற்பட தீர்மானித்து நடவடிக்கைகளை விளக்குவர்.

## தகவல் கோவை

**இணைப்பு 3.5.1**

இறைவாக்கினர்கள், கடவுளின் வார்த்தைகளை (விருப்பத்தை), குறித்த காலத்தில், குறித்த சூழ்நிலைகளில், வெளிப்படுத்தி வாழ்ந்த / வாழ்கின்ற மனிதர்களே ஆவர். நாம் திருவிவிலியத்தின் இறையாக்கினர்களை நோக்குவது போல எமது சூழ்நிலைகளில் இறைவாக்கின் அடிப்படையில், 'எப்படி வாழ வேண்டும்' என சவாலிடுபவர்களையும் நோக்க வேண்டும். எரேமியா 1:3-10 குறிப்பிடுவது போல இறைவாக்கினர்களின் பணி, தீமையை களைவதும் நன்மையை வளர்ச்சியடையச் செய்வதுமாகும்.

நெருக்கடி நிலைகளில், இறைவிருப்பப்படி வாழும் சமுதாயத்தை உருவாக்க உழைப்பது மிகவும் முக்கியமானது. பேராயர் ஒஸ்கார் ரொமேரோ, பேராயர் ஹெல்டர் கமரா இருவரும் இலத்தீன் அமெரிக்கா நெருக்கடி நிலையிலிருந்த போது பணியாற்றியவர்கள் ஆவர். வன்முறை தவறு, நன்மை தராது, என்பதை வெளிப்படையாக கூறியபடி, சாதாரன மக்களுடன் தன்னை அடையாளப்படுத்தினார் பேராயர் ஒஸ்கார் ரொமேரோ. வறுமையில் வாடுபவர்களுடன் உணவை பகிர்ந்து கொள்வது மட்டும் போதாது, ஏன் வறுமை நிலவுகின்றது என கேள்வி கேட்டு சமுக மாற்றத்தை ஏற்படுத்த வேண்டும் எனும் நோக்கில் செயற்பட்டவர் பேராயர் ஹெல்டர் கமரா.

இலங்கையில் புத்தளையில், சாதாரன மக்களுக்கு விழிப்புணர்வையூட்டி நற்சமுதாயத்தை கட்டியெழுப்பும் பணியில் அருட்பணி மைக்கல் ரொட்ரிக்கோ ஈடுபட்டார். பேராயர் இலக்ஷ்மன் விக்கிரமசிங்கவும் இனப்பிரச்சினையால் பாதிக்கப்பட்ட மக்கள், மலையக மக்கள் என்போரின் வாழ்வு மேம்பட செயற்பட்டார். கிளிநொச்சியில் 'கருணாநிலையம்' எனும் இல்லத்தை அமைத்து, கைவிடப்பட்ட பெண்கள், வறிய மாணவிகள் போன்றோர் வாழ்வை உயர்வுறச்செய்ய பல்வேறுவிதங்களில் செல்வி மியூரியல் ஹட்சின்ஸ் பணியாற்றினார்.

இவர்களைப்போல இன்னும் பலர் இறையாட்சியை, நெருக்கடி நிறைந்த சூழ்நிலைகளில் ஏற்படுத்த இன்றும் செயற்பட்டு வருகின்யனர்.

## குழுத்தேடியாய்வு அறிவுறுத்தல் பத்திரம்.

**இணைப்பு 3.5.2**

**குழுச்செயற்பாட்டுக்கான அறிவுறுத்தல்கள்**

- செயற்பாட்டுப்படிவம் குறித்து குழுக்கள் ஒவ்வொன்றும் அதிக கவனம் செலுத்துங்கள்.
- குழுவினருடன் நன்கு கலந்துரையாடி, திட்டமிட்டு செயற்பாடுகளில் ஈடுபடுங்கள்.
- குழுவினரின் கருத்து வெளிப்பாடுகளை, அறிக்கையாக்கி, வகுப்பில் சமர்ப்பிக்க தயாராகுங்கள்.

1. இன்றைய இறைவாக்கினர்கள் பணி பற்றிய கதைகளை பகிர்ந்துகொள்ளுங்கள்.
2. இன்றைய இறைவாக்கினர்கள் பணிகளை எரேமியா 1:3-10 அடிப்படையில் சிந்தித்து எழுதுங்கள்.
3. இறையாட்சிக்கான இன்றைய இறைவாக்கினர்களின் செயற்பாடுகள் ஐந்தினை முன்வையுங்கள்
4. இன்றைய இறைவாக்கினர்களின் நாளாந்த மன்றாட்டு ஒன்றை எழுதுங்கள்.

**தேர்ச்சி 3.0** : இறையாட்சியை பின்பற்றி நல்வாழ்வு வாழ்வர்.

**தேர்ச்சி மட்டம் 3.6** : உண்மை அமைதி ஏற்படுத்த இறையாட்சியின் அடிப்படையில் குரலெழுப்புவர்.

**செயற்பாடு 3.6** : உண்மை அமைதி ஏற்படுத்த இறையாட்சியின் அடிப்படையில், அசிசியூர் பிரான்சிஸ், பேராயர் டெஸ்மன் டுட்டு போல குரலெழுப்புவோம்.

**நேரம்** : 120 நிமிடங்கள்.

**தரவிருத்தி உள்ளீடுகள்** :

- இணைப்பு 3.6.1 இலுள்ள தகவல் கோவை.
- இணைப்பு 3.6.2 இலுள்ள குழுத்தேடியாய்வு அறிவுறுத்தல் பத்திரம்.
- திருவிவிலியம்
- எழுது கடதாசி, நிறப்பேனா

**கற்றல் கற்பித்தல் செயலொழுங்கு** :

**படி 3.6.1.**

- இணைப்பு 3.5.1 இலுள்ள தகவல் கோவையை ஓரிரு முறைகள் மாணவர்கள் நன்கு விளங்கும் வண்ணம் வாசியுங்கள்.
- 'உண்மை அமைதி' பற்றி விளக்குங்கள்.
- உண்மை அமைதியை வெளிப்படுத்தும் சம்பவங்களை / கருத்துக்களை விளக்கும்படி மாணவர்களுக்கு இடமளியுங்கள்.
- 'இறையாட்சியின் அடிப்படையில் உண்மை அமைதிக்காக செயற்படவேண்டும்' என்பது பற்றிய ஒரு கலந்துரையாடலில் திறந்த மனதுடன் ஈடுபட மாணவர்களுக்கு சந்தர்ப்பமளியுங்கள்.
- பின்வரும் விடயங்களை வலியுறுத்தும் கலந்துரையாடலில் ஈடுபட வழிகாட்டுங்கள்.

- 'உண்மை அமைதி' இலங்கை உட்பட பல நாடுகளுக்கும் தேவை என்பது.
- 'உண்மை அமைதி' இறையாட்சியின் பண்புகளின் அடிப்படையில் வரவேண்டும் என்பது.
- மனுக்குலம் பிரிவினைகளை கடந்து, 'உண்மை அமைதி' ஏற்பட செயற்படவேண்டும் என்பது.
- ஒரு இனத்துக்கு எதிராக மற்றோர் இனம் வாள் எடுக்காத, போர்பயிற்சிகளில் ஈடுபடாத நிலை கடவுளின் விருப்பம் (மீக்கா 4:1-4) என்பது.
- தூயாவி உண்மையை நோக்கி வழிநடத்துகின்றார் (யோவான் 16:13) என்பது.
- உண்மை அமைதியின் பொருட்டு நாம் பணியாற்ற வேண்டும் என்பது.

15 நிமிடங்கள்

**படி 3.6.2** :

- மாணவர்களை சிறுகுழுக்களாக்குங்கள்.
- குழுத்தேடியாய்வு அறிவுறுத்தல் பத்திரப்பிரதிகளை மாணவர்களுக்கு வழங்குங்கள்.
- தேவையான எழுது கடதாசி, நிறப்பேனா என்பனவற்றை மாணவர்களுக்கு வழங்குங்கள்.
- குழுச்செயற்பாட்டை அவதானித்து உறுதி செய்யுங்கள்.
- அறிக்கைகள் சமர்ப்பிப்பதற்கு குழுக்களை ஆயத்தப்படுத்துங்கள்.

45 நிமிடங்கள்

படி 3.6.3 :

- அறிக்கை சமர்ப்பிக்க குழுக்களை வழிப்படுத்துங்கள்
- வேறு பொருத்தமான கருத்துக்களை வெளிக்கொணர அதே குழுவினருக்கு சந்தர்ப்பமளியுங்கள்.
- ஆக்கபூர்வமான விமர்சனங்களை முன்வைக்க ஏனைய குழுக்களுக்கு இடமளியுங்கள்.
- குழுக்களின் சிந்தனைப்பகிர்வினை தொகுத்து, பின்வரும் கருத்துக்களை இணைத்து, ஆரோக்கியமான கலந்துரையாடலில் ஈடுபடுங்கள்.

- உண்மை அமைதி, எல்லாரும் இறையாட்சியின் விழுமியங்களின் அடிப்படையில் வாழும்போது ஏற்படும் என்பது.
- அசிசியூர் பிரான்சிஸ் பகைமை, எதிர்ப்புணர்வு... போன்றவற்றை கடந்து உண்மையான அமைதியை அடைய பணியாற்றினார் என்பது.
- பேராயர் டெஸ்மன் டுட்டு, கறுப்பின மக்களின் மீது திணிக்கப்பட்டிருந்த நிற ஒடுக்குமுறையை கடந்த உண்மை அமைதியை நாட பணியாற்றினார் என்பது.
  - உண்மைக்கும் ஒப்புரவுக்குமான ஆணைக்குழுவை நிறுவியமை.
  - மன்னிப்பின் தேவையை முன்வைத்து விழிப்புணர்வை ஏற்படுத்த செயற்பட்டமை.
- உண்மை அமைதிக்காக, சுயநலம், இனம், மதம், மொழி... போன்ற எல்லா வரையறைகளை கடந்து நாம் செயற்படவேண்டும் என்பது.

60 நிமிடங்கள்

**கணிப்பீட்டு மதிப்பீட்டு நியதிகள்**

1. அசிசியூர் பிரான்சிஸ்சின் 'என்னை அமைதியின் கருவியாக்கும்...' எனும் அமைதிக்கான மன்றாட்டை மனனம் செய்க.
2. பேராயர் டெஸ்மன் டுட்டுவின் 'உண்மை-அமைதிக்கான' பணியை விளக்குவர்.
3. உண்மை-அமைதியை ஏற்படுத்த நடைமுறைக்கு பொருத்தமான செயற்பாடுகள் ஐந்தை முன்வைப்பர்.
4 உண்மை-அமைதிக்கான கருவியாக செயற்படுவேன்/செயற்படுவோம் என தீர்மானித்து, செயற்பாட்டுக்கான திட்டங்கள் சிலவற்றை கூறுவர்.

## தகவல் கோவை

**இணைப்பு 3.6.1**

உண்மை-அமைதி மனுக்குலத்துக்கு தேவையான ஒன்று. இது இறையாட்சியின் அடிப்படையில் மேற்கொள்ளப்படும் போது முழுமையான உள்ளான திருப்தியைத் (Inner Satisfaction) தருகின்றது. இந்த அனுபவத்தை அசிசியூர் பிரான்சிஸ், பேராயர் டெஸ்மன் டுட்டு போன்றோரில் காணமுடிகிறது. போர், பகைமையுணர்வு என்பவற்றுக்கு மத்தியில் அசிசியூர் பிரான்சிஸ் அவர்களும், பேராயர் டெஸ்மன் டுட்டு அவர்களும் உண்மை-அமைதியைத் தேடினர். பகைமையைக் கடந்து பணியாற்றிய இருவரும் குறிப்பிட்ட சமுகத்தை (அசிசியூர், தென்னாபிரிக்கா) கடந்து, முழுவுலகும் அமைதியை சிந்திக்கவும், தேடவும் முயற்சிக்க விழிப்புணர்வை ஏற்படுத்தினர்.

உண்மை-அமைதி, நீதியின் அடிப்படையில் மட்டுமே உருவாகும். இறையாட்சியின் விழுமியங்களை தவிர்த்து ஏற்படுத்தப்படும் எந்த ஒரு நிலைமையையும் உண்மை-அமைதி என கருதமுடியாது. உண்மை-அமைதிக்காக எல்லா இடங்களிலும் செயற்பாடுகள் இறையாட்சியின் அடிப்படையில் தொடங்கப்பட வேண்டும்.

**அசிசியூர் பிரான்ஸ்சின் மன்றாட்டு**

**அமைதியின் தூதனாய் என்னையே மாற்றுமே**
**அன்பனே இறைவனே என்னிலே வாருமே**

**பகைமை உள்ள இடத்தில் பாசத்தை வளர்க்கவும்**
**வேதனை நிறைந்த மனதில் மன்னிப்பு வழங்கவும்**
**கலக்கம் அடையும் வாழ்வில் நம்பிக்கை ஊட்டவும்**
**அன்பனே இறைவனே என்னிலெ வாருமே**

**தளர்ச்சி ஒங்கும் போது மனத்திடம் தழைக்கவும்**
**இருளே சூளும்வேளை ஒளியை ஏற்றவும்**
**துயரம் வாட்டும் நேரம் உதயம் காணவும்**

**ஆறுதல் அன்னை அளித்து புரிதலை வளர்க்கவும்**
**கொடுப்பதில் நிறைவைக் கண்டு மன்னித்து வாழவும்**
**தன்னலம் ஒழித்து புதிய உலகம் படைக்கவும்**
**அன்பனே இறைவனே என்னிலே வாருமே.**

## குழுத்தேடியாய்வு அறிவுறுத்தல் பத்திரம்.

**இணைப்பு 3.6.2**

**குழுச்செயற்பாட்டுக்கான அறிவுறுத்தல்கள்**

- செயற்பாட்டுப்படிவம் குறித்து குழுக்கள் ஒவ்வொன்றும் அதிக கவனம் செலுத்துங்கள்.
- குழுவினருடன் நன்கு கலந்துரையாடி, திட்டமிட்டு செயற்பாடுகளில் ஈடுபடுங்கள்.
- குழுவினரின் கருத்து வெளிப்பாடுகளை, அறிக்கையாக்கி, வகுப்பில் சமர்ப்பிக்க தயாராகுங்கள்.

- விவாதிக்க:

  பழிவாங்குதலிலா மன்னிப்பளித்தளிலா, 'நீதி மைய உண்மை-அமைதி' ஏற்படும்?

**தேர்ச்சி 4.0** : திருவிவிலியத்தின்படி வாழ்வர்.

**தேர்ச்சி மட்டம் 4.1** : இறைமக்களின் விசுவாச (பற்றுறுதி) வரலாற்றை புரிந்துகொண்டு பொறுப்புடன் வாழ்வர்.

**செயற்பாடு 4.1** : இறைமக்களின் விசுவாச (பற்றுறுதி) வரலாற்றை புரிந்துகொண்டு பொறுப்புடன் வாழ்வோம்.

**நேரம்** : 80 நிமிடங்கள்.

**தரவிருத்தி உள்ளீடுகள்** :

- இணைப்பு 4.1.1 இலுள்ள தகவல் கோவை.
- இணைப்பு 4.1.2 இலுள்ள குழுத்தேடியாய்வு அறிவுறுத்தல் பத்திரம்
- திருவிவிலியம்
- எழுது கடதாசி, நிறப்பேனா

**கற்றல் கற்பித்தல் செயலொழுங்கு** :

**படி 4.1.1.**

- இணைப்பு 4.1.1 இலுள்ள தகவல் கோவையை ஓரிரு முறைகள் மாணவர்கள் நன்கு விளங்கும் வண்ணம் வாசியுங்கள்.
- 'விசுவாச (பற்றுறுதி) வரலாறு' பற்றி விளக்குங்கள்.
- விசுவாச (பற்றுறுதி) வரலாறு கூறும் சில சம்பவங்களை முன்வைக்க மாணவர்களுக்கு இடமளியுங்கள்.
- 'வரலாற்றை விசுவாசத்துடன் நோக்குதல்' தொடர்பான ஒரு கலந்துரையாடலில் திறந்த மனதுடன் ஈடுபட மாணவர்களுக்கு சந்தர்ப்பமளியுங்கள்.
- பின்வரும் விடயங்களை வலியுறுத்தும் கலந்துரையாடலில் ஈடுபட வழிகாட்டுங்கள்

| |
|---|
| • மக்கள் கடவுளால் எப்படி வழிநடத்தப்பட்டனர் என்பதை கூறுவதே விசுவாச வரலாறு என்பது.<br>• 'விசுவாச வரலாறு' கூறும் சம்பவங்கள் அனைத்தும், மக்கள் விசுவாசத்தை புதுப்பித்து வாழ உதவும் என்பது.<br>• மனுக்குலம், விசுவாச புதுப்பித்தலுடன் இறையாட்சிக்காக செயற்படவேண்டும் என்பது.<br>• இறையாட்சியை ஏற்று, பொறுப்புடன் செயற்படும்போது நல்வாழ்வு வாழலாம் என்பது. |

10 நிமிடங்கள்

**படி 4.1.2** :

- மாணவர்களை சிறுகுழுக்களாக்குங்கள்.
- குழுத்தேடியாய்வு அறிவுறுத்தல் பத்திரப்பிரதிகளை மாணவர்களுக்கு வழங்குங்கள்.
- தேவையான எழுது கடதாசி, நிறப்பேனா என்பனவற்றை மாணவர்களுக்கு வழங்குங்கள்.
- குழுச்செயற்பாட்டை அவதானித்து உறுதி செய்யுங்கள்.
- அறிக்கைகள் சமர்ப்பிப்பதற்கு குழுக்களை ஆயத்தப்படுத்துங்கள்.

30 நிமிடங்கள்

**படி 4.1.3** :

- அறிக்கை சமர்ப்பிக்க குழுக்களை வழிப்படுத்துங்கள்
- வேறு பொருத்தமான கருத்துக்களை வெளிக்கொணர அதே குழுவினருக்கு சந்தர்ப்பமளியுங்கள்.

- ஆக்கபூர்வமான விமர்சனங்களை முன்வைக்க ஏனைய குழுக்களுக்கு இடமளியுங்கள்.
- குழுக்களின் சிந்தனைப்பகிர்வினை தொகுத்து, பின்வரும் கருத்துக்களை இணைத்து, ஆரோக்கியமான கலந்துரையாடலில் ஈடுபடுங்கள்.

> - பற்றுறுதியின் முன்மாதிரி இயேசு என்பது.
> - இஸ்ரயேல் மக்களும் (பழைய ஏற்பாடு), திருச்சபையும் (புதிய ஏற்பாடு), தாம் கடவுளுடன் எப்படி வாழ்ந்தோம் என்பதை, கடவுளின் வழிநடத்துதலுடன், விசுவாசக் கண்ணோட்டத்தில் நோக்கி, பகிர்ந்துகொண்டவற்றின் நூலுருவே திருவிவிலியம் (விசுவாச வரலாறு) என்பது.
> - விசுவாச வரலாற்றில், கடவுள் வரலாற்றின் கடவுளாக நோக்கப்படுகின்றார் (விடுதலைப்பயணம் 4:15) என்பது.
> - இஸ்ரயேலர்கள் கடவுளுடைய ஆட்சிக்காக உழைக்க அழைக்கப்பட்டது போல எம்மையும் கடவுள் அழைக்கிறார் என்பது.
> - இன்றைய நிகழ்வுகளையும் விசுவாசக் கண்ணோட்டத்தில் நோக்கி பற்றுறுதியை உறுதிப்படுத்த வேண்டும் என்பது.

40 நிமிடங்கள்

**கணிப்பீட்டு மதிப்பீட்டு நியதிகள்**

1. 'இறைமக்கள் தம் வரலாறை விசுவாசக்கண்ணோட்டத்தில் நோக்கியதன் வெளிப்பாடே விசுவாசவரலாறு' என்பதை விளக்குவர்.
2. இஸ்ரவேல் மக்களின் விசுவாச வரலாற்றிலிருந்து (பழைய ஏற்பாடு) கடவுளைப்பற்றி கூறப்படும் கருத்துக்கள் ஐந்தை முன்வைப்பர்.
3. திருச்சபையின் விசுவாச வரலாற்றிலிருந்து (புதிய ஏற்பாடு) வெளிப்படுத்தப்பட்ட வாழ்க்கை முறையை சிந்தித்து கூறுவர்.
4. இன்றைய காலகட்டத்தில் இடம்பெறும் சம்பவங்களில் இரண்டை, விசுவாசக்கண்ணேட்டத்துடன் விளக்குவர்.

## தகவல் கோவை

**இணைப்பு 4.1.1**

வரலாறு என்பது குறித்த காலத்தில் நடைபெற்ற சம்பவங்களை குறிப்பிடும் ஒன்றாகும். இந்த வரலாற்றை விசுவாசக்(பற்றுறுதி) கண்ணேட்டத்தில் நோக்கியதன் வெளிப்பாடே 'விசுவாச (பற்றுறுதி) வரலாறு' ஆகும். தம் மூதாதையர் கடவுளுடன் உறவு கொண்டு எப்படி வாழ்ந்தனர், கடவுள் எப்படி அவர்களை வழிநடத்தினார், கடவுள் தம்மை எப்படி வழிநடத்துகின்றார் என்பவற்றை, இறைமக்கள் தமக்குள் பகிர்ந்து வாழ்ந்தனர். இத்தகைய பகிர்வுகள் திரட்டப்பட்டு தொகுக்கப்பட்ட போதே திருவிவிலியம் தோன்றியது.

பழைய ஏற்பாடு யூதமக்களின் விசுவாச வரலாற்றையும், புதிய ஏற்பாடு கிறிஸ்தவர்களின் (திருச்சபை) விசுவாச வரலாற்றையும், முன்வைக்கின்றன. இந்த நிகழ்வுகளிலுள்ள இறையாட்சியின் விழுமியங்களை அடையாளம் காண்பது விசுவாசத்தை ஆழப்படுத்தி உறுதிப்படுத்த உதவும்.

இன்றைய நிகழ்வுகளிலும் கடவுளின் செயற்பாட்டை விசுவாசத்துடன் நோக்குவது மனுக்குலத்தின் வளர்ச்சிக்கு உதவும். கடவுளின் செயற்பாட்டை விசுவாசத்துடன் நோக்கி, இறையாட்சிக்காக வாழ முற்படுவது மனுக்குலத்துக்கு நிச்சயமாக நன்மைகளைத் தரும்.

## குழுத்தேடியாய்வு அறிவுறுத்தல் பத்திரம்

**இணைப்பு 4.1.2**

**குழுச்செயற்பாட்டுக்கான அறிவுறுத்தல்கள்**

- செயற்பாட்டுப்படிவம் குறித்து குழுக்கள் ஒவ்வொன்றும் அதிக கவனம் செலுத்துங்கள்.
- குழுவினருடன் நன்கு கலந்துரையாடி, திட்டமிட்டு செயற்பாடுகளில் ஈடுபடுங்கள்.
- குழுவினரின் கருத்து வெளிப்பாடுகளை, அறிக்கையாக்கி, வகுப்பில் சமர்ப்பிக்க தயாராகுங்கள்.

1. விசுவாச வரலாற்றை மீட்டிப்பார்ப்பதன் மூலம் மனுக்குலம் பெறும் அனுபவத்தை விளக்குங்கள்.
2. 'வரலாற்றின் கடவுளின் செயற்பாடுகளை' வாசிக்கும்போது பெறப்படும் விசுவாச வளர்ச்சியை சிந்தித்து எழுதுங்கள்.
3. இன்றைய காலகட்டத்திலும் கடவுள் செயற்படுகின்றார் என்பதைக் குறிக்க ஒரு சம்பவத்தை முன்வையுங்கள்.
4. விசுவாச வரலாற்றிலிருந்து கற்கும் படிப்பினைகள் ஐந்தை முன்வையுங்கள்.

**தேர்ச்சி 4.0** : திருவிவிலியத்தின்படி வாழ்வர்.

**தேர்ச்சி மட்டம் 4.2** : திருவிவிலியத்தை புரிந்துகொண்டு பொறுப்புடன் வாழ நடவடிக்கை எடுப்பர்.

**செயற்பாடு 4.2** : திருவிவிலியத்தை புரிந்துகொண்டு பொறுப்புடன் வாழ நடவடிக்கை எடுப்போம்.

**நேரம்** : 80 நிமிடங்கள்.

**தரவிருத்தி உள்ளீடுகள்** :

- இணைப்பு 4.2.1 இலுள்ள தகவல் கோவை.
- இணைப்பு 4.2.2 இலுள்ள குழுத்தேடியாய்வு அறிவுறுத்தல் பத்திரம்
- திருவிவிலியம்
- எழுது கடதாசி, நிறப்பேனா

**கற்றல் கற்பித்தல் செயலொழுங்கு :**

**படி 4.2.1.**

- இணைப்பு 4.2.1 இலுள்ள தகவல் கோவையை ஓரிரு முறைகள் மாணவர்கள் நன்கு விளங்கும் வண்ணம் வாசியுங்கள்.
- 'திருவிவிலியம்' பற்றி விளக்குங்கள்.
- 'திருவிவிலியம் வாழ்வின் சிறப்புக்கு/உயர்வுக்கு எப்படி பாவிக்கப்படுகின்றது என்பது' பற்றிய கதைகள், சம்பவங்கள், சிந்தனைகள் போன்றவற்றை பகிர்ந்து கொள்ள மாணவர்களுக்கு இடமளியுங்கள்.
- 'திருவிவிலியமும் வாழ்வும்' பற்றிய ஒரு கலந்துரையாடலில் திறந்த மனதுடன் ஈடுபட மாணவர்களுக்கு சந்தர்ப்பமளியுங்கள்.
- பின்வரும் விடயங்களை வலியுறுத்தும் கலந்துரையாடலில் ஈடுபட வழிகாட்டுங்கள்.

> - கடவுளுக்கும் மனுக்குலத்துக்கும் இடையே நிலவிய உறவை விளக்குவதே திருவிவிலியம் என்பது.
> - தீமைகளை விட்டு விலகி நன்மை வழியில் வாழும்படி கடவுள் திரும்பவும் திரும்பவும் வலியுறுத்துவதை திருவிவிலியம் வெளிப்படுத்துகின்றது என்பது.
> - திருவிவிலியத்தை வாசித்து, தீமையை விட்டு விலகி கடவுளுடன் நெருங்கி வாழ்வதன் மூலம் மனுக்குல வாழ்வு சிறப்புறும் என்பது.

10 நிமிடங்கள்

**படி 4.2.2** :

- மாணவர்களை சிறுகுழுக்களாக்குங்கள்.
- குழுத்தேடியாய்வு அறிவுறுத்தல் பத்திரப்பிரதிகளை மாணவர்களுக்கு வழங்குங்கள்.
- தேவையான எழுது கடதாசி, நிறப்பேனா என்பனவற்றை மாணவர்களுக்கு வழங்குங்கள்.
- குழுச்செயற்பாட்டை அவதானித்து உறுதி செய்யுங்கள்.
- அறிக்கைகள் சமர்ப்பிப்பதற்கு குழுக்களை ஆயத்தப்படுத்துங்கள்.

30 நிமிடங்கள்

படி 4.2.3 :

- அறிக்கை சமர்ப்பிக்க குழுக்களை வழிப்படுத்துங்கள்
- வேறு பொருத்தமான கருத்துக்களை வெளிக்கொணர அதே குழுவினருக்கு சந்தர்ப்பமளியுங்கள்.
- ஆக்கபூர்வமான விமர்சனங்களை முன்வைக்க ஏனைய குழுக்களுக்கு இடமளியுங்கள்.
- குழுக்களின் சிந்தனைப்பகிர்வினை தொகுத்து, பின்வரும் கருத்துக்களை இணைத்து, ஆரோக்கியமான கலந்துரையாடலில் ஈடுபடுங்கள்.

- இறைவெளிப்பாட்டின் அடிப்படையில் மனுக்குலத்துக்கு அளிக்கப்பட்ட திருவிவிலியம், இறைஏவுதலும் (மனித புத்திக்கு அப்பாற்பட்ட விடயங்களை முன்வைக்க கடவுளால் அளிக்கப்பட்ட ஏவுதல்) இறை ஊக்கமும் (இறை திட்டங்களை முன்வைக்க அருளப்பட்ட துணிவு) மிக்கது என்பது.
- திருமறையை வாசிக்கும் ஒருவரின் உள்ளத்தில் இறைவன் உரையாடும் போது இறைசித்தம் என்ன என்பதை அறிந்து கொள்ளலாம் என்பது.
- கடவுளின் வழிநடத்தலின் அடிப்படையில் உருவான திருவிவிலியம் மனித நல்வாழ்வுக்கு பாவிக்கப்பட வேண்டும் (II தீமோத்தேயு 3:16, II பேதுரு 1:19-21) என்பது.

  கற்பித்தல்
  கண்டித்தல்
  சீராக்கல்

  நேர்மையாக வாழ பயிற்றுவித்தல்
- திருவிவிலியம் மனுக்குல விடுதலைக்கு வழிகாட்டுகின்றது (I பேதுரு 2:1-5) என்பது.
- திருவிவிலியத்தை உரிய முறையில் கடவுளின் ஆட்சியின் விழுமியங்களின் பின்னனியில் விளங்கிக்கொள்ள வேண்டும் (II பேதுரு 3:15-16) என்பது
- இயேசுவை உரிய முறையில் திருவிவிலியத்தின் மூலம் புரிந்துகொள்ள வேண்டும் (யோவான் 20:31; எபிரேயர் 1:1-3) என்பது.
- இன்று நடைபெறும் நிகழ்வுகளில் இறைவிருப்பை புரிந்துகொண்டு இறையாட்சிக்காக உழைக்க வேண்டும் என்பது.

40 நிமிடங்கள்

**கணிப்பீட்டு மதிப்பீட்டு நியதிகள்**

1. மனுக்குலத்தின் வாழ்வை மேம்படுத்த திருவிவிலியம் பாவிக்கப்பட வேண்டும் (II தீமோத்தேயு 3:16) என்பதை விளக்குவர்.
2. கடவுள் மனுக்குலத்தை முழுவாழ்வுக்குள் இட்டுச்செல்லும் திட்டத்துடன் செயற்பட்டார் என்பதை சிந்தித்து திருவிவிலியப்பகுதிகள் சிலவற்றின் மூலம் கூறுவர்.
3. திருவிவிலியத்தை இறையாட்சியின் விழுமியங்களின் அடிப்படையில் விளக்குவது மிகவும் பொருத்தமானது என்பதை சில உதாரனங்களுடன் முன்வைப்பர்.
4. மனுக்குலத்தின் உயர்வுக்காக திருவிவிலியத்தை பாவிக்க வேண்டும் எனும் தீர்மானத்துடன், செயற்பாட்டுக்கான வழிமுறைகள் சிலவற்றை முன்வைப்பர்.

## தகவல் கோவை

**இணைப்பு 4.2.1**

திருவிவிலியம் கடவுளின் வழிகாட்டலின்படி உருவாக்கப்பட்டது (II தீமோத்தேயு 3:16). இதனை மனுக்குல மேம்பாட்டுக்காக பாவிப்பது மனுக்குலத்தின் கடமையாகும். இறைவிருப்பை கற்பிக்கவும், மனித தவறுகளை கண்டிக்கவும், தவறுகளை களைந்து மனுக்குல வாழ்வை சீராக்கவும், அவர்களை நேர்மையுடன் வாழ பயிற்றுவிக்கவும் திருவிவிலியம் பயன்படுத்தப்படவேண்டும். மனுக்குலத்தின் முழுவிடுதலைக்கு, திருவிவிலிய வழியை நன்கு புரிந்து செயற்படவேண்டும் (I பேதுரு 2:1-5; II பேதுரு 3:15-16).

கடவுளின் முழுவிடுதலை மைய நடவடிக்கைகளில், இயேசுவின் மனுவுருவாதல் மிகவும் முக்கியமானது. இயேசுவை சரியாக புரிந்துகொண்டு மனுக்குலத்தின் வாழ்வுக்காக திருவிவிலியத்தை பயன்படுத்த வேண்டும் (யோவான் 20:31; எபிரேயர் 1:1-3).

**இணைப்பு 4.2.2**

### குழுச்செயற்பாட்டுக்கான அறிவுறுத்தல்கள்

- செயற்பாட்டுப்படிவம் குறித்து குழுக்கள் ஒவ்வொன்றும் அதிக கவனம் செலுத்துங்கள்.
- குழுவினருடன் நன்கு கலந்துரையாடி, திட்டமிட்டு செயற்பாடுகளில் ஈடுபடுங்கள்.
- குழுவினரின் கருத்து வெளிப்பாடுகளை, அறிக்கையாக்கி, வகுப்பில் சமர்ப்பிக்க தயாராகுங்கள்.
- குழுக்களுக்கிடையே கலந்துரையாடுங்கள்:

    திருவிவிலியம் கிறிஸ்தவத்தின் உயர்வை விளக்கும் நூலா?
    திருவிவிலியம் மனுக்குலத்தின் வாழ்வை மேம்படுத்த உதவும் நூலா?

**தேர்ச்சி 4.0** : திருவிவிலியத்தின்படி வாழ்வர்.
**தேர்ச்சி மட்டம் 4.3** : இந்து, இஸ்லாம், பௌத்த சமய புனித நூல்களை புரிந்து கொண்டு மனித மாண்புக்காக உழைப்பர்.
**செயற்பாடு 4.3** : இந்து, இஸ்லாம், பௌத்த சமய புனித நூல்களை புரிந்து கொண்டு மனித மாண்புக்காக உழைப்போம்.
**நேரம்** : 80 நிமிடங்கள்.
**தரவிருத்தி உள்ளீடுகள்** :

- இணைப்பு 4.3.1 இலுள்ள தகவல் கோவை.
- இணைப்பு 4.3.2 இலுள்ள குழுத்தேடியாய்வு அறிவுறுத்தல் பத்திரம்.
- திருவிவிலியம், வேதங்கள், குர்ஆன், திரிபிடக்க.
- எழுது கடதாசி, நிறப்பேனா

**கற்றல் கற்பித்தல் செயலொழுங்கு :**
**படி 4.3.1.**

- இணைப்பு 4.3.1 இலுள்ள தகவல் கோவையை ஓரிரு முறைகள் மாணவர்கள் நன்கு விளங்கும் வண்ணம் வாசியுங்கள்.
- 'இந்து, இஸ்லாம், பௌத்த சமய புனித நூல்கள்' பற்றி விளக்குங்கள்.
- 'இந்து, இஸ்லாம், பௌத்த சமய புனித நூல்கள் கூறும் மனித மாண்பு பற்றிய கதைகளையும் சிந்தனைகளையும் பகிர மாணவர்களுக்கு இடமளியுங்கள்.
- 'சமய புனித நூல்களும் மனித மேம்பாடும்' பற்றிய ஒரு கலந்துரையாடலில் திறந்த மனதுடன் ஈடுபட மாணவர்களுக்கு சந்தர்ப்பமளியுங்கள்.
- பின்வரும் விடயங்களை வலியுறுத்தும் கலந்துரையாடலில் ஈடுபட வழிகாட்டுங்கள்.

> - இந்து, இஸ்லாம், பௌத்த சமய புனித நூல்கள் அனைத்தும் புனிதமாக மதிக்கப்பட வேண்டியவை என்பது.
> - அனைத்து சமய புனித நூல்களும் மனித மாண்பை வலியுறுத்துகின்றன என்பது.
> - நாம், சமய புனித நூல்களை பிரிவினைக்கு பாவிக்காமல் மனித ஒற்றுமைக்காக பாவிக்க வேண்டும் என்பது.

10 நிமிடங்கள்

**படி 4.3.2** :

- மாணவர்களை சிறுகுழுக்களாக்குங்கள்.
- குழுத்தேடியாய்வு அறிவுறுத்தல் பத்திரப்பிரதிகளை மாணவர்களுக்கு வழங்குங்கள்.
- தேவையான எழுது கடதாசி, நிறப்பேனா என்பனவற்றை மாணவர்களுக்கு வழங்குங்கள்.
- குழுச்செயற்பாட்டை அவதானித்து உறுதி செய்யுங்கள்.
- அறிக்கைகள் சமர்ப்பிப்பதற்கு குழுக்களை ஆயத்தப்படுத்துங்கள்.

30 நிமிடங்கள்

படி 4.3.3 :

- அனைத்து சமய புனித நூல்களையும் புரிந்து கொண்டு மனித மேம்பாட்டுக்காக உழைக்க வேண்டும் என்பது பற்றி (கவிதை, சித்திரம், கதை, நாடகம் ... போன்றவைகளில் ஏதாவதொன்றின் மூலம்) அறிக்கை சமர்ப்பிக்க குழுக்களை வழிப்படுத்துங்கள்
- வேறு பொருத்தமான கருத்துக்களை வெளிக்கொணர அதே குழுவினருக்கு சந்தர்ப்பமளியுங்கள்.
- ஆக்கபூர்வமான விமர்சனங்களை முன்வைக்க ஏனைய குழுக்களுக்கு இடமளியுங்கள்.
- குழுக்களின் சிந்தனைப்பகிர்வினை தொகுத்து, பின்வரும் கருத்துக்களை இணைத்து, ஆரோக்கியமான கலந்துரையாடலில் ஈடுபடுங்கள்.

- இந்து, இஸ்லாம், பௌத்த சமய புனித நூல்கள் அனைத்தும், குறித்த மக்களின் விசுவாச வரலாற்றுடன் தொடர்புபட்டது என்பது.
- வேதங்கள் (இந்து), குர்ஆன் (இஸ்லாம்), திரிபிடக்க (பௌத்தம்)... அனைத்தும் மனித விடுதலையை வெளிப்படுத்துகின்றன என்பது.
- அனைத்து புனித நூல்களும் மனித அழிவுக்கு அல்ல மாறாக மனுக்குலத்தை முழுவாழ்வுக்கு அழைக்கின்றது என்பது.

40 நிமிடங்கள்

**கணிப்பீட்டு மதிப்பீட்டு நியதிகள்**

1. அனைத்து சமய புனித நூல்களையும் பற்றி தனித்தனியாக விளக்குவர்
2. 'அனைத்து சமய புனித நூல்களும் நன்மையை வலியுறுத்துகின்றன, தீமையை விட்டு விலகும்படி வலியுறுத்துகின்றன' என்னும் கூற்றின் அடிப்படையில் சமயங்களின் நோக்கம் பற்றி சிந்தித்து எழுதுவர்.
3. மனுக்குலம், அனைத்து சமய புனித நூல்களையும் அங்கீகரித்து, ஒற்றுமையுடன் மனித மாண்புக்காக, செய்யவேண்டிய பணிகள் ஐந்தை கூறுவர்.
4. மனித மேம்பாட்டை தவிர்க்கும் பிரிவினைகள், சமயங்களின் நோக்கமல்ல என்பதை உணர்ந்து, உறவுடன் வாழ செய்யவேண்டிய சில திட்டங்களை முன்வைப்பர்.

## தகவல் கோவை

**இணைப்பு 4.3.1**

அனைத்து சமயங்களின் புனித நூல்களும் புனிதமாக மதிக்கப்பட வேண்டியவை. இந்து, இஸ்லாம், பௌத்த சமய புனித நூல்கள் அனைத்தும், குறித்த மக்களின் விசுவாச வரலாற்றினையே வெளிப்படுத்துகின்றன. கிறிஸ்தவத்துக்கு திருவிவிலியம் எப்படி முக்கியமானதாக கருதப்படுகின்றதோ, அதேபோல இந்து இஸ்லாம் பௌத்த சமயத்தவருக்கு முறையே வேதங்கள், குர்ஆன், திரிபிடக்க என்பவை கருதப்படுகின்றன. இவை கூறும் சிந்தனைகள் அனைத்தும் இந்த சமயங்களின் வழியாக மனுக்குலம் எப்படி முழுமையடையலாம் என்பது பற்றித்தான் அமைந்துள்ளன.

எந்த ஒரு சமய புனித நூலும் மனுக்குலத்தின் வாழ்வு அழிவதற்கு எத்தகைய நடவடிக்கைகளை மேற்கொள்ளவேண்டும் என்று கூறவில்லை, மாறாக மனுக்குலத்தின் வாழ்வு நிறைவுறுவதற்கு எத்தகைய நடவடிக்கைகளை மேற்கொள்ளவேண்டும் என்றே கூறுகின்றது. எல்லா நூல்களும், தீமையை விட்டு விலகி நன்மையைப் பின்பற்றுவதைப்பற்றியே அழுத்தம் திருத்தமாக விளக்குகினறன. எனவே, மனித மாண்புக்காக இணைந்து செயற்படுவதே சமய புனித நூல்களின் நோக்கத்ததை நிறைவேற்றுவதாக அமையும்.

## குழுத்தேடியாய்வு அறிவுறுத்தல் பத்திரம்

**இணைப்பு 4.3.2**

**குழுச்செயற்பாட்டுக்கான அறிவுறுத்தல்கள்**

- செயற்பாட்டுப்படிவம் குறித்து குழுக்கள் ஒவ்வொன்றும் அதிக கவனம் செலுத்துங்கள்.
- குழுவினருடன் நன்கு கலந்துரையாடி, திட்டமிட்டு செயற்பாடுகளில் ஈடுபடுங்கள்.
- குழுவினரின் கருத்து வெளிப்பாடுகளை, அறிக்கையாக்கி, வகுப்பில் சமர்ப்பிக்க தயாராகுங்கள்.

1. இலங்கையிலுள்ள சமயங்களின் புனித நூல்களின் பிரதான சிந்தனைகளை விளக்குங்கள்.
2. அனைத்து சமயங்களின் புனித நூல்களும் மனித மாண்புக்கு முக்கியத்துவம் கொடுப்பதால், சமயங்களை மதிப்பது முக்கியம் என சிந்தித்து எழுதுங்கள்.
3. 'மனித மாண்பு மதிக்கப்பட சமயங்கள் இணைந்து எத்தகைய பணிகளை மேற்கொள்ளலாம் என கூறுங்கள்.
4. அனைத்து சமய நூல்களை மட்டுமல்ல, அனைத்து சமயங்களைச் சார்ந்தவர்களையும் மதித்து உறவுடன் வாழ வேண்டும் என தீரமானித்து செயற்பாட்டுக்குரிய சில திட்டங்களை முன்வையுங்கள்.

**தேர்ச்சி 4.0** : திருவிவிலியத்தின்படி வாழ்வர்.

**தேர்ச்சி மட்டம் 4.4** : திருவிவிலியத்தின் அடிப்படையில் விடுதலைக்காக பணிபுரிவர்.

**செயற்பாடு 4.4** : திருவிவிலியத்தின் அடிப்படையில் விடுதலைக்காக பணிபுரிவோம்.

**நேரம்** : 80 நிமிடங்கள்.

**தரவிருத்தி உள்ளீடுகள்** :

- இணைப்பு 4.4.1 இலுள்ள தகவல் கோவை.
- இணைப்பு 4.4.2 இலுள்ள குழுத்தேடியாய்வு அறிவுறுத்தல் பத்திரம்
- திருவிவிலியம்
- எழுது கடதாசி, நிறப்பேனா

**கற்றல் கற்பித்தல் செயலொழுங்கு** :

**படி 4.4.1.**

- இணைப்பு 4.4.1 இலுள்ள தகவல் கோவையை ஓரிரு முறைகள் மாணவர்கள் நன்கு விளங்கும் வண்ணம் வாசியுங்கள்.
- 'விடுதலை' பற்றி விளக்குங்கள்.
- திருவிவிலியத்தின் அடிப்படையில் விடுதலைக்காக பணி புரிதல் தொடர்பான கதைகளையும் சிந்தனைகளையும் வெளிப்படுத்த மாணவர்களுக்கு இடமளியுங்கள்.
- 'விடுதலைப்பணியும் திருவிவிலிய அடிப்படைகளும்' பற்றிய ஒரு கலந்துரையாடலில் திறந்த மனதுடன் ஈடுபட மாணவர்களுக்கு சந்தர்ப்பமளியுங்கள்.
- பின்வரும் விடயங்களை வலியுறுத்தும் கலந்துரையாடலில் ஈடுபட வழிகாட்டுங்கள்.

> - விடுதலை அனைவருக்கும் அவசியம் என்பது.
> - திருவிவிலியம் விடுதலை வாழ்வுக்கு வழிகாட்டுகின்றது என்பது.
> - இறையாட்சியின் மதிப்பீடுகளின் அடிப்படையில் விடுதலைக்காக செயற்பட திருவிவிலியம் அழைக்கின்றது என்பது.
> - திருவிவிலியத்தை வாசிப்போர் விடுதலைப் பணியிலிருந்து விலகி வாழ முடியாது என்பது.
> - நாம் திருவிவிலியம் கூறும் விடுதலை வாழ்வு நோக்கி உழைக்க வேண்டும் என்பது.

10 நிமிடங்கள்

**படி 4.4.2** :

- மாணவர்களை சிறுகுழுக்களாக்குங்கள்.
- குழுத்தேடியாய்வு அறிவுறுத்தல் பத்திரப்பிரதிகளை மாணவர்களுக்கு வழங்குங்கள்.
- தேவையான எழுது கடதாசி, நிறப்பேனா என்பனவற்றை மாணவர்களுக்கு வழங்குங்கள்.
- குழுச்செயற்பாட்டை அவதானித்து உறுதி செய்யுங்கள்.
- அறிக்கைகள் சமர்ப்பிப்பதற்கு குழுக்களை ஆயத்தப்படுத்துங்கள்.

30 நிமிடங்கள்

படி 4.4.3 :

- அறிக்கை சமர்ப்பிக்க குழுக்களை வழிப்படுத்துங்கள்
- வேறு பொருத்தமான கருத்துக்களை வெளிக்கொணர அதே குழுவினருக்கு சந்தர்ப்பமளியுங்கள்.
- ஆக்கபூர்வமான விமர்சனங்களை முன்வைக்க ஏனைய குழுக்களுக்கு இடமளியுங்கள்.
- குழுக்களின் சிந்தனைப்பகிர்வினை தொகுத்து, பின்வரும் கருத்துக்களை இணைத்து, ஆரோக்கியமான கலந்துரையாடலில் ஈடுபடுங்கள்.

- ஒடுக்கப்பட்ட மக்களுக்கு வாழ்வு தரும் விடுதலையின் கடவுளே இஸ்ரயேலின் கடவுள் என்பது.
- இயேசு முன்வைக்கும் விடுதலை, பழிக்குப்பழி, வன்முறை... போன்ற தீயபண்புகள் சாராதவை (எசாயா 61:1; லூக்கா 4:18-19) என்பது.
- உண்மை, தரும் விடுதலை (யோவான் 8:32) நிறைவான வாழ்வு என்பது.
- இறையாட்சியின் மதிப்பீடுகளின் அடிப்படையில், திருவிவிலியம் பறைசாற்றும் விடுதலையை விளங்கிக்கொண்டு, நாம் இன்றைய விடுதலையாளரகளாக வேண்டும் என்பது.

40 நிமிடங்கள்

**கணிப்பீட்டு மதிப்பீட்டு நியதிகள்**

1. திருவிவிலியம் கூறும் விடுதலை பற்றி விளக்குவர்
2. திருவிவிலியக்கடவுள் (God of the Bible) விடுதலையின் கடவுள் (God of Liberation) என்பதை, இஸ்ரயேலருக்கு எகிப்திய அடிமைத்தனத்திலிருந்து கிடைத்த விடுதலையை அடிப்படையாகக் கொண்டு சிந்தித்து, கடவுளின் பண்புகள் சிலவற்றை குறிப்பிடுவர்.
3. இறையாட்சியின் விழுமியங்களின் அடிப்படையில், விடுதலைப்பணிகள் மேற்கொள்ளப்பட வேண்டிய வழிமுறைகள் ஐந்தினை முன்வைப்பர்.
4. அகிம்சை வழியில் விடுதலையை அடைய எடுக்கப்படக்கூடிய வழிவகைகளை விளக்குவர்.

## தகவல் கோவை

**இணைப்பு 4.4.1**

திருவிவிலியத்தின் கடவுள் விடுதலையின் கடவுள். முக்கியமாக பழைய ஏற்பாடு (முழுவதும்), திரும்பவும் திரும்பவும் இந்த விடுதலைக் கடவுளைப் பற்றி விளக்குகின்றது. இஸ்ரயேலர் எகிப்திய ஒடுக்குமுறையில் துன்புற்று, கடவுளை நோக்கி கூக்குரலிட்ட போது, கடவுள் அவர்களுக்கு விடுதலையை அளித்தார் (விடுதலைப்பயணம் 3:7-23). இஸ்ரயேலருக்கு மட்டுமல்ல ஒடுக்கப்பட்ட அனைவருக்கும் திருவிவிலியக்கடவுள் விடுதலையளித்துள்ளார் (ஆமோஸ் 9:7).

வன்முறை மூலம் மேற்கொள்ளப்படும் விடுதலை நடவடிக்கைகளை இயேசு ஒருபோதும் அங்கீகரிக்கவில்லை. இயேசு வன்முறையை நிராகரித்தார். இயேசு நாசரேத்தூர் தொழுகைக்கூடத்தில், இறைவாக்கினர் எசாயாவின் சுருளேட்டிலிருந்து வாசித்த போது, வன்முறையைப்பற்றி குறிப்பிடப்படும் வாக்கியப்பகுதியை (எசாயா 61:1 - 'நம் கடவுள் அநீதிக்குப் பழிவாங்கும் நாளை அறிவிக்கவும்') தவிர்த்து விட்டு வாசித்தார் (லூக்கா 4: 18-19).

இறையாட்சியுடன் தொடர்பு படுத்தியே, இயேசு விடுதலையை நோக்கினார். நித்திய வாழ்வைப்பற்றிய பின்னனியில், உண்மை, விடுதலை தரும் என விளக்கினார் (யோவான் 8:32).
எனவே திருவிவிலியத்தை பயன்படுத்துவோர் கட்டாயம் விடுதலைப்பணிகளில் ஈடுபடவேண்டும். முக்கியமாக இவை இறையாட்சியின் பண்புகளின் அடிப்படையில் அமைய வேண்டும்.

இணைப்பு 4.4.2

**குழுச்செயற்பாட்டுக்கான அறிவுறுத்தல்கள்**

- செயற்பாட்டுப்படிவம் குறித்து குழுக்கள் ஒவ்வொன்றும் அதிக கவனம் செலுத்துங்கள்.
- குழுவினருடன் நன்கு கலந்துரையாடி, திட்டமிட்டு செயற்பாடுகளில் ஈடுபடுங்கள்.
- குழுவினரின் கருத்து வெளிப்பாடுகளை, அறிக்கையாக்கி, வகுப்பில் சமர்ப்பிக்க தயாராகுங்கள்.

- குழுவாக ஒப்பிடுக:

  திருவிவிலியம் கூறும் விடுதலைக்கதைகளையும், நாம் எம் நாளாந்த வாழ்வில் எதிர்கொள்ளும்/கூறப்படும் விடுதலைக்கதைகளையும் ஒப்பிட்டு, இறையாட்சி விழுமியங்களை அடையாளம் கண்டு கலந்துரையாடுங்கள்.

**தேர்ச்சி 4.0** : திருவிவிலியத்தின்படி வாழ்வர்.

**தேர்ச்சி மட்டம் 4.5** : திருவிவிலியத்தின் அடிப்படையில் ஒருமைப்பாட்டு வாழ்வை அனைவருடனும் வாழ்வர்.

**செயற்பாடு 4.5** : திருவிவிலியத்தின் அடிப்படையில் ஒருமைப்பாட்டு வாழ்வை அனைவருடனும் வாழ்வோம்.

**நேரம்** : 80 நிமிடங்கள்.

**தரவிருத்தி உள்ளீடுகள்** :

- இணைப்பு 4.5.1 இலுள்ள தகவல் கோவை.
- இணைப்பு 4.5.2 இலுள்ள குழுத்தேடியாய்வு அறிவுறுத்தல் பத்திரம் செயற்பாட்டுப்படிவம்.
- திருவிவிலியம்
- எழுது கடதாசி, நிறப்பேனா

**கற்றல் கற்பித்தல் செயலொழுங்கு** :

**படி 4.5.1.**

- இணைப்பு 4.5.1 இலுள்ள தகவல் கோவையை ஓரிரு முறைகள் மாணவர்கள் நன்கு விளங்கும் வண்ணம் வாசியுங்கள்.
- 'ஒருமைப்பாடு' பற்றி விளக்குங்கள்.
- 'திருவிவிலியத்தின் அடிப்படையில் ஒருமைப்பாடு' பற்றிய கருத்துக்களை முன்வைக்க மாணவர்களுக்கு இடமளியுங்கள்.
- 'ஒருமைப்பாட்டு வாழ்வு' தொடர்பான ஒரு கலந்துரையாடலில் திறந்த மனதுடன் ஈடுபட மாணவர்களுக்கு சந்தர்ப்பமளியுங்கள்.
- பின்வரும் விடயங்களை வலியுறுத்தும் கலந்துரையாடலில் ஈடுபட வழிகாட்டுங்கள்.

> - அனைவரும் ஒருவரையொருவர் ஏற்று ஒற்றுமையுடன் வாழ்வதே 'ஒருமைப்பாடு' என்பது.
> - திருவிவிலியம் ஒருமைப்பாட்டு வாழ்வை வலியுறுத்துகின்றது என்பது.
> - நாம் ஒருமைப்பாட்டுடன் வாழும்போது மட்டுமே அனைவரும் வாழலாம் என்பது.

10 நிமிடங்கள்

**படி 4.5.2** :

- மாணவர்களை சிறுகுழுக்களாக்குங்கள்.
- குழுத்தேடியாய்வு அறிவுறுத்தல் பத்திரப்பிரதிகளை மாணவர்களுக்கு வழங்குங்கள்.
- தேவையான எழுது கடதாசி, நிறப்பேனா என்பனவற்றை மாணவர்களுக்கு வழங்குங்கள்.
- குழுச்செயற்பாட்டை அவதானித்து உறுதி செய்யுங்கள்.
- அறிக்கைகள் சமர்ப்பிப்பதற்கு குழுக்களை ஆயத்தப்படுத்துங்கள்.

30 நிமிடங்கள்

**படி 4.1.3** :

- அறிக்கை சமர்ப்பிக்க குழுக்களை வழிப்படுத்துங்கள்
- வேறு பொருத்தமான கருத்துக்களை வெளிக்கொணர அதே குழுவினருக்கு சந்தர்ப்பமளியுங்கள்.
- ஆக்கபூர்வமான விமர்சனங்களை முன்வைக்க ஏனைய குழுக்களுக்கு இடமளியுங்கள்.

- குழுக்களின் சிந்தனைப்பகிர்வினை தொகுத்து, பின்வரும் கருத்துக்களை இணைத்து, ஆரோக்கியமான கலந்துரையாடலில் ஈடுபடுங்கள்.

> - ஒருமைப்பாடு மனுக்குல வாழ்வுக்கு அவசியம் எனபது.
> - அனைத்து உயிர்களுடனும் இணைந்து, ஒன்றித்து வாழும் வாழ்வே ஒருமைப்பாட்டு வாழ்வாக இருக்கும் என்பது.
> - ஒரேமாதிரியான ஒன்றிப்பு (யோவான் 17), வேற்றுமையில் ஒற்றுமை (I கொரிந்தியர் 12:12 - 26) எனும் இருவிதமாக ஒருமைப்பாட்டை நோக்கலாம் என்பது.
> - ஒருமைப்பாடு திருச்சபைகளுக்கு இடையேயும், வேறுபட்ட சமயங்கள், அமைப்புகள் என்பவற்றுடனும் ஏற்படவேண்டும் என்பது.
> - ஒருமைப்பாட்டின் அடிப்படை ‘அன்பு’ (யோவான் 15:12,17) என்பது.
> - ஒருமைப்பாட்டை தவிர்ப்பது அழிவையே தரும் (I கொரிந்தியர் 1:10,17; எபேசியர் 2:14-17: கலாத்தியர் 6:15) என்பது.
> - மனுக்குலம் ஒருமைப்பாட்டுடன் வாழவேண்டும் என்பது.

40 நிமிடங்கள்

**கணிப்பீட்டு மதிப்பீட்டு நியதிகள்**

1. திருவிவிலிய அடிப்படையில் ஒருமைப்பாடு பற்றி விளக்குவர்.
2. ‘ஒருமைப்பாடற்ற மனித வாழ்வில் அர்த்தமில்லை’ என்பதை சிந்தித்து, பிரிவினைகளால் அர்த்தம் இல்லை என்பதை உதாரணங்களுடன் கூறுவர்.
3. இறையாட்சியின் விழுமியங்களின் அடிப்படையில் ஒருமைப்பாட்டுப்பணியின் செயற்பாடுகள் சிலவற்றை முன்வைப்பர்.
4. ஒருமைப்பாட்டுக்காக உழைக்க தீர்மானித்து, சில செயற்திட்டங்களை விளக்குவர்.

## தகவல் கோவை

**இணைப்பு 4.5.1**

மனுக்குல வாழ்வின் உயர்வுக்கு அவசியமானவைகளில் ஒருமைப்பாடு முக்கியமானதாகும். ஒரேமாதிரியான ஒன்றிப்பு/ஒருமைப்பாடு (யோவான் 17 - Unity in Uniformity), வேற்றுமையில் ஒற்றுமை (I கொரிந்தியர் 12:12-26 - Unity in Diversity) என இரு விதமாக ஒருமைப்பாட்டை நோக்கலாம். திருவிவிலியம் ஒருமைப்பாட்டை வலியுறுத்துகின்றது. இயேசுவை நம்பி வாழும் திருச்சபைகளுக்கு இடையேயும், அனைத்து சமயங்களுக்கு இடையேயும் ஒருமைப்பாடு ஏற்பட வேண்டும். இறையாட்சியின் விழுமியங்களின் அடிப்படையில் ஒருமைப்பாட்டுக்கான நடவடிக்கைகள் மேற்கொள்ளப்படவேண்டும். முக்கியமாக ஒருமைப்பாட்டின் அடிப்படை அன்பு (யோவான் 15:12,17). இயேசுவின் திருப்பணி ஒருமைப்பாட்டின் திருப்பணியாகும் (எபேசியர் 2:14-17). பிரிவினைகள் அழிவினையே தரும் என்னும் புரிந்துணர்வுடன் (I கொரிந்தியர் 1:10,17; கலாத்தியர் 6:15), மனுக்குலத்தின் ஒருமைப்பாட்டுக்காக உழைக்க வேண்டியது மனுக்குலத்தின் கடமையாகும். ஏனெனில் மனுக்குல இருப்பு, மனுக்குல ஒருமைப்பாட்டிலேயே தங்கியுள்ளது.

## குழுத்தேடியாய்வு அறிவுறுத்தல் பத்திரம்

**இணைப்பு 4.5.2**

**குழுச்செயற்பாட்டுக்கான அறிவுறுத்தல்கள்**

- செயற்பாட்டுப்படிவம் குறித்து குழுக்கள் ஒவ்வொன்றும் அதிக கவனம் செலுத்துங்கள்.
- குழுவினருடன் நன்கு கலந்துரையாடி, திட்டமிட்டு செயற்பாடுகளில் ஈடுபடுங்கள்.
- குழுவினரின் கருத்து வெளிப்பாடுகளை, அறிக்கையாக்கி, வகுப்பில் சமர்ப்பிக்க தயாராகுங்கள்.

  - குழு 1: 'ஒரேமாதிரியான ஒன்றிப்பு (Unity in Uniformity)' மனுக்குல வாழ்வுக்கு மிகவும் பொருத்தமானது என ஒரு சுவரொட்டியை அமைக்க.
  - குழு 2: 'வேற்றுமையில் ஒற்றுமை (Unity in Diversity)', மனுக்குல வாழ்வுக்கு மிகவும் பொருத்தமானது என பத்திரிகைக்கு ஒரு கட்டுரை எழுதுக.

## பகுதி - III

### 8.3.0 : கணிப்பீடும் மதிப்பீடும்

8.3.1 : கணிப்பீடும் மதிப்பீடும் விளக்கமும்

8.3.2 : கற்றல் கற்பித்தலை விரிவுபடுத்துவதற்கான கருவிகள்

8.3.3 : மாதிரி வினாப்பத்திரம்

## 8.3.1. கணிப்பீடும் மதிப்பீடும் விளக்கம்

கற்றல் - கற்பித்தல் மூலம் எதிர்பார்க்கப்படும். கற்றற்பேறுகளைத் தெளிவாகப் பெற்றுக் கொள்ளவதற்கும், மாணவர்கள் எதிர்பார்க்கப்படும் தேர்ச்சி மட்டத்தைப் பெற்றுக் கொள்வதற்குமாக வகுப்பறையில் இலகுவாகச் செயற்படுத்த முடியுமான, ஒன்றுக்கொன்று தொடர்புபட்ட இரண்டு வேலைத்திட்டங்களாக் கணிப்பீட்டையும், மதிப்பீட்டையும் கருதலாம். கணிப்பீடு சரியான முறையில் நடைபெறுமெனின், வகுப்பில் கற்கும் ஒவ்வொரு பிள்ளையும் உரிய தேர்ச்சியின் (நிபுணத்துவத்தின்) அண்மிய மட்டத்தையாவது பெற்றுக் கொள்வது கடினமல்ல. மதிப்பீட்டின் மூலம் எதிர்ப்பார்க்கப்படுவது பிள்ளைகள் பெற்றுக் கொண்ட தேர்ச்சி எம்மட்டத்தில் காணப்படுகிறது என்பதைக் கண்டுகொள்வதாகும்.

கணிப்பீட்டைச் செயற்படுத்தும்போது ஆசிரியர் மாணவர்களுக்கு இரண்டு விதமாக வழிகாட்டல்களை வழங்கலாம். இவ்வழிகாட்டல்கள் இரண்டும் பொதுவாகப் பின்னூட்டல் (Feed Back) முன்னோக்கிய ஊட்டல் (Feed Forward) என அழைக்கப்படுகின்றன. மாணவர்களின் பலவீனம், இயலாமை என்பவற்றை இனங்கண்டு கொண்ட பின், அவர்களிடம் காணப்படும் கற்றல் தொடர்பான பிரச்சினைகளை நீக்கிக் கொள்வதற்குப் பின்னூட்டலையும், மாணவர்களின் பலம், இயலாமை என்பவற்றை இனங்கண்டு கொண்ட பின், அவற்றை மேலும் விருத்தி செய்து கொள்வதற்கு முன்னோக்கிய ஊட்டலையும் வழங்குவது ஆசிரியரின் கடமையோடு சார்ந்த பொறுப்பாகும்.

கற்றல் - கற்பித்தல் செய்கையின் வெற்றி, பாடத்திட்டத்திலுள்ள தேர்ச்சிகளில் எத்தேர்ச்சிகளை மாணவர்கள் எந்த மட்டத்தில் அடைந்துள்ளனரா என்பதை அறிவதன் மூலம் இனங்காணப்படுகின்றது. கற்றல் - கற்பித்தல் செய்கையின்போது, மாணவர்கள் அடைந்த தேர்ச்சி மட்டங்களை அளவிடுவது எதிர்பார்க்கப்படுவதோடு, அடைந்த தேர்ச்சி மட்டங்கள் பற்றிய விபரங்களைப் பெற்றோர் உள்ளிட மற்றும் உரிய நபர்களுக்கும் தொடர்பாடல் செய்வது ஆசிரியரின் பொறுப்பாகும்.

உங்களிடம் முன் வைக்கப்பட்டுள்ள இப்பாடத்திட்டம் மாணவர் மையான (Student Centered) தேர்ச்சி மட்ட (Competency - Based) செயற்பாடு சார்ந்த (Activity - Oriented) பிரவேசத்தைக் கொண்டது. வாழ்வைக் கருத்துள்ளதாக்கிக் கொள்வதற்கு, செயற்பாட்டினூடாகக் கற்றல் என்பது ஆசிரியரின் உருமாற்றப் பங்களிப்பில் காணப்படும் பிரதான அம்சமாகும்.

ஏற்கனவே தயாரிக்கப்பட்ட செயற்பாடுகளின் தொடரகத்தின் ஊடகச் செயற்படுத்தப்படும் இப்பாடத்திட்டமானது, கற்றல் - கற்பித்தல் செயற்பாட்டினை, கணிப்பீடு - மதிப்பீடு என்பவற்றோடு ஒன்றிணைப்பதற்கு முயற்சி எடுக்கப்பட்டுள்ளது. ஒவ்வொரு செயற்பாட்டிலும் அதன் இரண்டாம் படியில் மாணவர்கள், குழுவாக ஆய்வில் ஈடுபடும்போது அவர்களைக் கணிப்பீடு செய்வதற்கும் செயற்பாட்டின் மூன்றாம் படியில் மாணவர்கள் தமது கண்டுபிடிப்புக்கள், பேறுகள் என்பவற்றைச் சமர்ப்பிக்கும்போது மாணவர்களை மதிப்பீடு செய்வதற்கும் ஆசிரியருக்கு முடியுமாகின்றது. மாணவர்கள் குழுவாக ஆய்வில் ஈடுபட்டிருக்கும்போது அவர்களினூடே சென்று அவர்களது வேலைகளை அவதானிப்பதன் மூலம், மாணவர்கள் முகங்கொடுக்கும் பிரச்சினைகளை வகுப்பறையில் தீர்ப்பதற்குரிய வசதிகளையும், வழிகாட்டல்களையும் வழங்குவது ஆசிரியரிடம் எதிர்பார்க்கப்படுகின்றது.

கணிப்பீடு, மதிப்பீடு என்பவற்றை இலகுவாகக் கொள்வதற்கு ஐந்து பொது நியதிகள் முன்வைக்கப்படுகின்றது. இந்நியதிகளில் முதன் மூன்று நியதிகளும் உரிய தேர்ச்சி மட்டத்தோடு தொடர்பான அறிவு, மனப்பாங்கு, திறன்கள் என்பவற்றை அடிப்படையாகக் கொண்டதாகவும், அடுத்த இரண்டு நியதிகளும் வாழ்க்கைக்குத் தேவைப்படும் முக்கியமான இரண்டு திறன்களை விருத்தி செய்து கொள்வதற்கானதாகவும் இருத்தல் வேண்டும். இந்த ஐந்து நியதிகளுடன் இணைந்ததான நடத்தை மாற்றங்கள் வகுப்பறையில் மாணவர்களிடம் காணப்படுகின்றதா என்பதைக் கண்டு கொள்வதற்கு, ஆசிரியர் முயற்சி எடுக்க வேண்டியதோடு, கணிப்பீட்டின் மூலம் கண்டு கொள்ளப்படும் மாணவர்கள் பெற்றுள்ள இத்திறன்களின் அளவை மதிப்பீட்டின் மூலம் ஆசிரியர் அளந்து கொள்ள வேண்டும்.

கணிப்பீடு தொடர்பான வேலைத்திட்டங்களை அபிவிருத்தி செய்து கொள்வதன் மூலம் கற்றல் கற்பித்தல் செய்கையை விரிவுபடுத்திக் கொள்ளலாம். இதற்காக முதலில் செயற்பாட்டுத் தொடரகத்தில் வழங்கப்பட்டுள்ள செயற்பாடுகளை கணிப்பீட்டு வகைகளை அடிப்படையாகக் கொண்டதான தொகுதிகளாக வேறாக்கிக் கொள்ளுங்கள்.

மாணவர்களின் கற்றலை மலரச் செய்யக்கூடியதாக, உரிய பாட விடயத்துடன் தொடர்பான செயற்பாட்டைத் தெரிவு செய்யுங்கள். இனி, உரிய கற்றல் - கற்பித்தல் செய்கைக்கான சாதனங்களைத் தயாரித்துக் கொள்ளுங்கள். ஒவ்வொரு செயற்பாட்டின் ஆரம்பத்தில் உரிய உபகரணங்களைக் குழுக்களுக்கு வழங்க வேண்டும். கற்றல் - கற்பித்தல் சொற்பாட்டினை விரிவாக்கும் போது அவை அமையக்கூடிய வகைகள் சில கீழே தரப்பட்டுள்ளன.

- எண்ணக்கருப்படம் (Concept Maps)
- சுவர்ப்பத்திரிகை (Wall News papers)
- புதிர்ப்போட்டி (Quizzes)
- வினாவிடைப்புத்தகம் (Question and Answer Books)
- மாணவர் செயற்பாட்டுக் கோவை (Portfolios)
- கண்காட்சி (Exhibitions)
- விவாதம் (Debates)
- குழுக் கலந்துரையாடல் (Panel Discussions)
- கருத்தரங்கு (Seminars)
- சமயோசிதப் பேச்சு (Impromtu Speech)
- நடிபங்கு (Role plays)
- இலக்கியக் கருத்துக்களையும், விமர்சனங்களையும் முன்வைத்தல் (Presentation of Literatue Reviews)
- வெளிக்களப் புத்தகம் / தினக் குறிப்புப் புத்தகம் / வேலைப் புத்தகம் (Field Books/ Nature Diaries)
- செய்முறை சோதனை (Practical Tests)

பாட வழிகாட்டியின் மூன்றாம் பகுதி, உத்தேசக் கற்றல் - கற்பித்தற் செய்கைகளை விரிவாக்கும் வகைகளைக் கொண்ட செயற்பாடுகளையும் அதற்கான கற்றல் - கற்பித்தற் சாதனங்களையும் அறிமுகஞ் செய்வதற்குத் திட்டமிடப்பட்டுள்ளது. இவ்வாறான செயற்பாடுகளினுள் கணிப்பீடும், அதனோடு தொடர்பான மதிப்பீடும் இணைக்கப்பட்டுள்ளதால், கற்றல் - கற்பித்தல் செய்கை, மேலும் விரிவாக்கப்பட்டுள்ளதோடு, மாணவர்கள் ஆர்வத்தோடும் மகிழ்ச்சியோடும் கற்றலில் ஈடுபடுவதற்கு முடியும்.

### 8.3.2 கற்றல் கற்பித்தலை விரிவுபடுத்துவதற்கான மதிப்பீட்டுக் கருவிகள்

01. பாடசாலைத் தவணை :- முதலாம் தவணை

02. உள்ளடக்கப்பட வேண்டிய தேர்ச்சி மட்டம் :- 1.3;1.4;1.5;

03. விடய உள்ளடக்கம் :- சமூகங்களாக படைப்புகளை பராமரித்தல். பொறுப்புடன் சூழலை பராமரித்தல். வள அழிவை தடுத்தல்.

04. கருவியின் தன்மை :- பாடசாலைச் /வேறுபொருத்மான இடம் சூழலை அவதானித்து. 'படைப்புப் பராமரிப்பு' பற்றிய கையேட்டை தயாரித்தல்.

05. கருவியின் நோக்கம் :-
- தெரிந்தெடுக்கப்பட்ட சூழலை அவதானிப்பர்
- வளப்பயன்பாட்டையும் பராமரிப்பையும் இனம் காண்பர்.
- படைப்புகள் பேணப்பட்டமையையும் பேணப் படாமையையும் அடையாளம் காண்பர்.
- பாடசாலை/தெரிந்தெடுக்கப்பட்ட இட சமுகத்தின் பொறுப்பான நடவடிக்கைகளையும் பொறுப்பற்ற நடவடிக்கைகளையும் இனம் காண்பர்.
  தெரிந்தெடுக்கப்பட்ட சூழலின் பராமரிப்பு நிலையை மதிப்பிடுவர்.
- தெரித்தெடுக்கப்பட்ட சூழலின் பராமரிப்புக்கான நடவடிக்கைகளை முன்வைப்பர்.
- மேற்குறிப்பிட்டவற்றை உள்ளடக்கும் கையேட்டை தயாரிக்க ஆயத்தமாவர்.

06. கருவிச் செயற்படுத்தல் பற்றிய ஆசிரியர்களுக்கான ஆலோசனைகள்
- ஆசிரியர் 1.3,1.4,1.5, செயற்பாடுகளை ஆரம்பிப்பதற்கு முன் இக்கருவியைவகுப்பில் அறிமுகம் செய்யுங்கள்.
- குழுக்களாக விபரங்களை சேகரித்து, மதிப்பிட்டு, உரிய திட்டங்களை முன்வைக்கும் கையேட்டை தயாரிப்பதோடு இக்கருவிச் செயற்பாடுகள் நினைவுறும் என அறிவியுங்கள்.
- மாணவர்களை குழுக்களாக்குங்கள்.
- குழுக்கள் ஒவ்வொன்றும், அவர்களது அவதானிப்புகளை குறிப்புப்புத்தகத்தில் எழுதிக்கொள்ளும் படி கூறுங்கள்.
- அவதானிப்புகளை திரட்டி, தெரிந்து கொள்ளப்பட்ட சூழலை மதிப்பிடவும், பராமரிப்பு நடவடிக்கைகளை முன்வைக்கவும், குழுக்களாக கலந்துரையாடலில் ஈடுபட இடமளியுங்கள்.
- கையேட்டை கையளிக்கவேண்டிய திகதியை அறிவியுங்கள்.

07. கருவிச்செயற்படுத்தல் பற்றிய மாணவர்களுக்கான ஆலோசனைகள் :-
- ஆசிரியரின் ஆலோசனைகளை நன்கு செவிமடுத்துக் கொள்ளுங்கள்.
- சூழல் அவதானிப்பு - மதிப்பீடு - பராமரிப்பு பற்றிய குறிப்புகளை எழுதிக்கொள்ளுங்கள்.
- திறந்த மனதுடன். சூழல்பராமரிப்புக்கான திட்டங்களை முன்வைத்து குழுவாககலந்துரையாடுங்கள்.
- கையேட்டை இணைந்து தயாரியுங்கள்.

8. கணிப்பீட்டு முறை

| குழு இலக்கமும் பெயரும் நியதிகள் | நோக்கங்களை விபரமாக விளங்கிக் கொள்ளல் | அவதானிப்பு நடவடிக்கைகளில் இணைந்து ஈடுபடுத்தலும். பொறுப்புகளை பகிர்தலும். | மதிப்பீட்டுச்செயற்பாட்டுக் கருத்துக்களை ஒழுங்கமைத்தல். | புதிய திட்டங்களை முன்வைத்தல். | படைப்பாற்றலுடன் மனைத்கவரும் முறையில் கையேட்டைதயாரித்தலும் குறிப்பிடப்பட்டதிகதியில் கையளித்தலும் | மொத்தம் |
|---|---|---|---|---|---|---|
| | | | | | | |
| | | | | | | |
| | | | | | | |
| | | | | | | |
| | | | | | | |

புள்ளிவழங்கும் திட்டம்

| | | |
|---|---|---|
| மிக நன்று | - | 04 |
| நன்று | - | 03 |
| சாதாரணம் | - | 02 |
| தேர்ச்சி பெற வேண்டும் | - | 01 |

01. பாடசாலைத் தவணை :- இரண்டாம் தவணை

02. உள்ளடக்கப்பட வேண்டிய தேர்ச்சி மட்டம்
:- 3.1, 3.2

03. விடய உள்ளடக்கம் :- இறையாட்சிக்காக உழைக்க முன்வரல் 'இயேசு-சமுக' சீடர்களாதல்

04. கருவியின் தன்மை :- இயேசுவின் வாழ்வுக்கூடாக 'இறையாட்சியை' புரிந்து கொண்டு, பேதுரு, பவுல் போன்றவர்களின் வழியில், இயேசு-சமுக சீடர்களாக இன்று வாழ்தல். குறித்த ஒரு உரையை முன்வைத்தல்.

05. கருவியின் நோக்கம் :- 'இறையாட்சி' பற்றிவரைவிலக்கணப்படுத்துவர். இயேசுவின் வாழ்வின் ஊடாக இறையாட்சியை புரிந்து கொள்வர்.

- இயேசுவின் வாழ்க்கை முறை
- இயேசுவின் போதனைகள்
- இயேசுவின் பணி

பேதுரு, பவுல் போன்றோரின் சீடத்துவத்தை முன்வைப்பர்
இறையாட்சிக்கான அர்ப்பணிப்பு
தீமைகளுடன் போராட்டம்
தீய மனப்பாங்குகளை வெளிப்படுத்தியமை
மனமாற்றம்
இறையாட்சிக்காக உழைத்தல்.
இன்று இயேசு சமுக சீடர்களாக வாழ்தல். பற்றி உரையாடுதல்
நன்மை - தீமை போராட்டம்
இறையாட்சியின் பண்புகள்
எமது வாழ்க்கை முறை, பணி, சிந்தனைப் பகிர்வு
மேற்குறிப்பிட்டவற்றை வெளிக்கொணரும் (05 நிமிடங்கள்) உரையை ஆயத்தப்படுத்துவர்.

06. கருவிச் செயற்படுத்தல் பற்றிய ஆசிரியர்களுக்கான ஆலோசனைகள்

- ஆசிரியர் 3.1 3.2 செயற்பாடுகள் ஆரம்பிப்பதற்கு முன் இக்கருவியை வகுப்பில் அறிமுகம் செய்யுங்கள்.
- குழுக்களாக விபரங்களை திரட்டி, அதனை உரை மூலம் முன்வைப்பதுடன் இக்கருவிச் செயற்பாடுகள் நிறைவுறும் என அறிவியுங்கள்.
- மாணவர்களை குழுக்களாக்குங்கள்.
- குழுக்களாக கலந்துரையாட இடமளியுங்கள்.
- உரையாற்றும் மாணவர்களை தெரிந்தெடுக்க வாய்ப்பளியுங்கள்.
- உரையாற்ற வேண்டிய திகதியை அறிவியுங்கள்.

07. கருவிச் செயற்படுத்தல் பற்றிய மாணவர்களுக்கான ஆலோசனைகள்

:-
- ஆசிரியரின் ஆலோசனைகளை நன்கு செவிமடுத்துக் கொள்ளுங்கள்.
- இயேசு, பேதுரு, பவுல் என்போரின் வாழ்வு, போதனை, பணி மூலம் வெளிப்படுத்தப்படும் இறையாட்சி பற்றிய சிந்தனைகளை, குழுக்கலந்துரையாடலின் போது பகிர்ந்து

கொள்ளுங்கள், அவற்றை குறிப்பேட்டில் எழுதிக்கொள்ளுங்கள்.

- "நாம் இயேசு சமுக சீடர்களாக எப்படி வாழ வேண்டும்?" எனும் வினாவுக்கு விடையளிக்க குழுவாக முயற்சி செய்யுங்கள்.
- உரையாற்றவிருப்பவரை உற்சாகப்படுத்துங்கள்.

8. கணிப்பீட்டு முறை

| குழு இலக்கும் பெயரும் நியதிகள் | நோக்கங்களை விபரமாக விளங்கிக் கொள்ளல் | செயற்பாடுகளை பொறுப்புடன் உறுதிப்படுத்தல் | ஒழுங்கமைப்பை வெளிப்படுத்தல் | குழுச்செயற்பாடுகளும் தலைமைத்துவப்பண்பும் | படைப்பாற்றலுடன் மனதைக்கவரும் முறையில் குறிப்பிடப்பட்ட திகதியில் உரையாற்றல் | மொத்தம் |
|---|---|---|---|---|---|---|
| | | | | | | |
| | | | | | | |
| | | | | | | |
| | | | | | | |
| | | | | | | |

புள்ளிவழங்கும் திட்டம்

| | | |
|---|---|---|
| மிக நன்று | - | 04 |
| நன்று | - | 03 |
| சாதாரணம் | - | 02 |
| தேர்ச்சி பெற வேண்டும் | - | 01 |

01. பாடசாலைத் தவணை :- மூன்றாம் தவணை

02. உள்ளடக்கும் தேர்ச்சி மட்டம் :- 4.2 4.3

03. விடய உள்ளடக்கம் :- திருவிவிலியத்தை புரிந்துகொள்ளல். இந்து, இஸ்லாம், பௌத்த மதங்களின் புனித நூல்களை புரிந்து கொள்ளல். மனித மாண்புக்காக இணைந்து உழைத்தல்.

04. கருவியின் தன்மை :- 'திருவிவிலியம், இந்து - இஸ்லாம் - பௌத்த மத புனித நூல்கள் என்பவற்றை புரிந்து கொண்டு மனித மாண்புக்கா உழைத்தல், பற்றிய ஒரு நாடகத்தை நடித்தல்.

05. கருவியின் நோக்கம் :- திருவிவிலியத்தை புரிந்துகொள்ளல்.

- இறை வழி காட்டல்
- மனுக்குல விடுதலை
- இறையாட்சிக்காக உழைத்தல்

இந்து - இஸ்லாம் - பௌத்த மத புனித நூல்களை புரிந்து கொள்ளல்.

- விசுவாச / நம்பிக்கை வெளிப்பாடு
- மனுக்குல மேம்பாடு

மனித மாண்புக்காக உழைத்தல் பற்றி உரையாடல்

- அனைவரையும் மதித்தல்
- இணைந்து வாழ்தல்

மேற்குறிப்பிட்டவற்றை உள்ளடக்கும் நாடகமொன்றை அரங்கேற்ற ஆயத்தமாவர்.

06. கருவிச் செயற்படுத்தல்பற்றிய ஆசிரியர்களுக்கான ஆலோசனைகள் :-

- ஆசிரியர் 4.2, 4.3 செயற்பாடுகளை ஆரம்பிப்பதற்கு முன் இக்கருவியை வகுப்பில் அறிமுகம் செய்யுங்கள்.
- விபரங்களை சேகரித்து, நாடகத்தை அரங்கேற்றுவதுடன் இக்கருவிச் செயற்பாடுகள் நிறைவுறும் என அறிவியுங்கள்.
- மாணவர்களை குழுக்களாக்குங்கள்.
- நாடக கருப்பொருளை உணர்த்தும் வழிகாட்டல் கருத்துக்களை குறிப்புப்புத்தகத்தில் குறித்துக் கொள்ள வழி காட்டுங்கள்.
- இப்படிப்பினையின் போதே, நிகழும் செயற்பாடுகளுக்கு கணிப்பீடு நிகழும் என்பதை மாணவர்களுக்கு வலியுறுத்துங்கள்.
- விபரங்களை பெற்றுக் கொள்வதற்காக, பொருத்தமான அடிப்படை தகவல்களை தேட ஊக்குவியுங்கள்.
- குழுவாக கலந்துரையாட இடமளியுங்கள்.
- நாடகத்துக்கான ஆயத்த நடவடிக்கைகளில் ஈடுபட நேரம் வழங்குங்கள்.
- நாடக அரங்கேற்ற தினத்தை அறிவியுங்கள்.

7. கருவிச் செயற்படுத்தல் பற்றிய மாணவர்களுக்கான அறிவுறுத்தல்கள் :-

- ஆசிரியரின் ஆலோசனைகளை செவிமடுத்துக் கொள்ளுங்கள்.
- கருப்பொருளுக்கு பொருத்தமான முறையில் தகவல்கள் - விடயங்களை சேகரியுங்கள்.
- குழு கலந்துரையாடல் மூலம் நாடகத்துக்கு தேவையான விபரங்களை குறித்துக் கொள்ளுங்கள்
- குழுக்களாக நாடகத்தை அரங்கேற்ற ஆயத்தமாகுங்கள்.
- குறித்த தினத்தில் நாடகத்தை அரங்கேற்ற ஆயத்தமாகுங்கள்.

நாடகத் தலைப்புகள்.

குழு 1 : இணைந்து வாழுவோம்.
குழு 2 : மனிதம் மலரட்டும்
குழு 3 : மதங்கள் பிரிவினைக்கல்ல மனித ஒன்றிப்புக்கே.
குழு 4 : மனித விடுதலை

8. கணிப்பீட்டு முறை

| குழுவின் இலக்கமும் பெயரும் நியதிகள் | நோக்கத்தை தெளிவாக உறுதிப்படுத்தல் | விபரங்களை சேகரித்தலும் செயற்பாடும் | தலைமைத்துவமும் குழுச்செயற்பாடுகளும் | ஒழுங்கமைப்பும் படைப்பாற்றலும் | கருத்து வெளிப்பாடு | ஆற்றல் வெளிப்பாடு | குறிப்பிட்ட தினத்தில் அரங்கேற்றல் | மொத்தம் |
|---|---|---|---|---|---|---|---|---|
| | | | | | | | | |
| | | | | | | | | |
| | | | | | | | | |
| | | | | | | | | |
| | | | | | | | | |

புள்ளிவழங்கும் திட்டம்

| | | |
|---|---|---|
| மிக நன்று | - | 04 |
| நன்று | - | 03 |
| சாதாரணம் | - | 02 |
| தேர்ச்சி பெற வேண்டும் | - | 01 |

